வெளிவந்துவிட்டது!                    வெளிவந்துவிட்டது!!

நீதிகளைப் புகட்டும் நூல் - - - -

- - - - மாதர்கள் தேடும் நூல்

குடும்பத்தை ஒழுங்காக நடத்தும் சிறந்த நூல்

# மாதர் நீதி

[மூன்று பர்வம்]

[அ. மஹாதேவ செட்டியாரவர்களால் புதிய முறையில் அமைக்கப்பட்டது]

## பத்திரிகைகளால் புகழ்ப்பெற்ற

## திருத்தமான 5-ம் பதிப்பு

இந்நூலைப்பற்றி எங்களுக்குத் தினமும் அநேக ஆர்டர்கள் வந்து குவிகின்றன. ஒவ்வொரு இல்லத்திலும் இந்நூல் அவசியம் இருக்கவேண்டுமாதலால் இந்நூலைக் கண்டோர் யாவரும் தம் பந்து மித்திரர்களுக்கும் தம் புத்திரிகளுக்கும் மனைவிமார்களுக்கும் வாங்கிக் கொடுக்கின்றனர். இந்நூலில் ஒன்றை வாங்கி பரிசுமளிக்கின்றனர். நீதியுடன் இல்வாழ்க்கையை ஒழுக்கமாக நடத்துவதற்கு அறியாதவருக்கு துன்பமேதவிர இன்பம் ஜநிப்பதில்லை என்பது உறுதியாம். இந்நூல் கல்விகற்கும் பர்வம், கணவரோடு கூடி வாழும் பர்வம், முதுமைப் பர்வம், என மூன்று பர்வங்களாக பிரிக்கப்பட்டிருக்கின்றது; ஒவ்வொரு பர்வத்திலும், மாதர்கள் நீதியாக வாழ்வதற்குரிய அநேக நீதிகளும் அந் நீதிகளைப் போதிக்கும் கதைகளும், அநேக நீதிகளின் மேற்கோள்களும் விளக்கமாக எழுதப்பட்டிருக்கின்றன.

இம் மாதிரியான நூல் இதுகாறும் தமிழில் வெளிவந்ததில்லை. இந்நூல் 5 பதிப்பு வெளிவந்திருப்பதே இதற்குப் போதுமான நற்சாக்ஷியாகும். இந்நூல் கலியாணமான பெண்களுக்கும் இனிமேல் கலியாணம் செய்துகொள்ளும் பெண்களுக்கும் மிக்க அவசியமான பொக்கிஷமாகும். உயர்ந்த கிளேஸ் கடிதத்தில் அச்சிடப்பட்டு அழகிய பயிண்டுடன் விலை ரூபா. 1—0—0.

உயர்ந்த பெதர்வெயிட்டு கடிதத்தில் அச்சிடப்பட்டு முழு காலிகோ ஸ்பெஷல் பயிண்டுடன் கூடியது. விலை ரூ. 1—8—0

[தபாற் கூலி வேறு.]



உ

கடவுள் துணை

திருக்கைலாய பரம்பரைத்
தருமபுர ஆதீனத்தைச் சார்ந்த
காசி மடாலயம்
ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள்
திருவாய் மலர்ந்தருளிய

# நீதிநெறிவிளக்கம் மூலமும், விருத்தி உரையும்

---

நீரிற் குமிழி யிளமை; நிறைசெல்வம்
நீரிற் சுருட்டு நெடுந்திரைகள்;—நீரில்
எழுத்தாகும் யாக்கை ; நமரங்காள் ! என்னே ?
வழுத்தாத தெம்பிரான் மன்று.

(பதவுரை) இளமை - இளமைப்பருவமானது, நீர் இல் - நீரினிடத்துண்டாகும், குமிழி ஆகும் - குமிழியாம் ; நிறை செல்வம் - நிறைந்த செல்வமானது, நீர் இல் - நீரினிடத்து, சுருட்டும் - மடங்கி வரும், நெடுமை - நெடிய, திரைகள் ஆகும் - அலைகளாம் ; யாக்கை - சரீரம், நீர் இல் - நீரினிடத்து, எழுத்து ஆகும் - (எழுதிய) எழுத்தாம் ; (ஆதலின்) நமரங்காள் - நம்மவர்களே !, எம்பிரான் - எமது கடவுளாகிய நடேசனது, மன்று - பொன்னம்பலத்தை, வழுத்தாதது - வணங்காதிருத்தல், என் - யாது ? (சொல்லுங்கள் !), எ-று.

# நீதிநெறி விளக்கம் மூலமும்,

(விருத்தியுரை) இது செய்யுட் கோவையிற் கண்டது. ஆன் மாக்கள் பற்றிய பற்றை விடுவித்தற்கு, அவை இம்மையி லனுப வித்தற்குரிய பொருள்களுள் இன்ப நுகர்தற்கு இளமைப்பருவ மும், அதற்குச் சாதனமாகிய செல்வமும் சரீரமும் முக்கியப் பொருள்கள் ஆதலின், அவற்றின் நிலையாமையை யுணர்த்த எடுத் துக்கொண்டவர் நீர்க்குமிழி தோன்றி யழிதல்போல இளமை தோன்றி யழிதலின், ' குமிழி இளமை எனவும் ', அலைகள் தோன் றும்போது பெரிதாகத் தோன்றிக் கரைசாரக் கரைசாரச் சுருங்கு தல்போலச் செல்வம் தோன்றும்போது பெரிதாகத் தோன்றி வர யரச் சுருங்குதலின், ' செல்வம் நெடுந்திரைகள் ' எனவும், நீரில் எழு திய எழுத்து அப்பொழுதே யழிதல்போலத் தோன்றிய சரீரம் உடனே யழிதலின், நீரில் எழுத்தாகும் யாக்கை ' எனவுங் கூறி அந் நிலையாப் பொருள்களைக்கொண்டு நிலைத்த பொருளைப் பெற வேண்டும் என்பார் ' எம்பிரான் மன்று வழுத்தாதது என் ' எனவுங் கூறினர். குமிழி - வினைமுதற் பொருளில் வந்த தொழிற்பெயர் ; குமிழ் - பகுதி, இ - விகுதி. குமிழ்த்தல் - புடைத்தல். திரை - வினை முதற்பொருளில் வந்த இகர விகுதியோடு புணர்ந்து குன்றிய தொழிற்பெயர் ; திரை - பகுதி, இ - புணர்ந்து குன்றிய விகுதி. எழுத்து-செயப்படுபொருளில் வந்த ஐகார விகுதியோடு புணர்ந்து குன்றிய தொழிற்பெயர் ; எழுது - பகுதி, ஐகார விகுதி புணர்ந்து குன்றியவழி விரிந்த தகரம் விகாரம். ' செல்வம் ' - செல்லுதல் ; அதனையுடைய பொருண்மேல் நிற்றலின் தொழிலாகுபெயர்; செல்-பகுதி, வ்-சந்தி, அம்-தொழிற்பெயர் விகுதி, சந்தியால் வந்த வகரமெய் நன்னூல் - உயிரியல்-கக-ம் சூத்திரத்து - உள்நெறியே என்ற மிகையால், அது தன்மைப்பன்மை வினைமுற்றுயில் வ்-இடை நிலை எனவும், அம் - தன்மைப்பன்மை விகுதியெனவுங் கொள்க. யாக்கை - கட்டப்படுவது ; அதாவது, தோலிரத்த முதலிய தாதுக ளாற் கட்டப்படுவது ; யா-பகுதி, கு-சாரியை, ககரத் தோற்றமும் உகரக்கேடுஞ் சந்தி, ஐ - விகுதி ; கட்டுதல் என்னும் பொருள்பட வருந் தொழிற்பெயராயின் யா - பகுதி, க் - சந்தி, கை - விகுதி. 'வழுத்தாதது' - எதிர்மறைத் தொழிற்பெயர் ; வழுத்து - பகுதி ;

உகரக்கேடு சந்தி, ஆ - எதிர்மறை விகுதி, அனைத்தும் ஓர் பகுதி, து, அ இரண்டுஞ் சாரியை, உகரக்கேடு சந்தி, து விகுதி; வினை முற்றுப் பொருளாகக்கொள்ளின் பொருள் உணர்த்தாமையை யறிக. 'சுருட்டும்'-தன்வினைப்பொருளில் வந்த பிறவினைப் பெய ரெச்சம்; சுருள் - பகுதி, ள் ட் ஆகத் திரிதல் சந்தி, து - பிறவினை விகுதி அனைத்தும் ஓர் பகுதி, உகரக்கேடு சந்தி, உம்-விகுதி, தன் வினையில் வரில் சுருளும் என வரும். எவன் என்னும் வினுவினைக் குறிப்பு வினைமுற்று இடைக்குறையாய் 'என்' என நின்றது; இது அகரச் சாரியை யேற்று என்ன எனவும், ஐகாரச் சாரியை, யேற்று என்னை எனவும் வரும். 'நமரங்காள்' - நாம் - பகுதி, நாம் முதல் குறுகல் விகாரம், அர் - பலர்பால் விகுதி, அம் - சாரியை, கள் - விகுதிமேல் விகுதி, ம், ங் - ஆகத் திரிதல் சந்தி, ஈற்றயல் அகரம் ஆகாரமாதல் விளியுருபு; நன்னூல் - பெ - இக - சூத்திரத் துள் அயல் நீட்சி. 'சொல்லுங்கள்' - இசையெச்சம்.

---

க. அறம்பொரு ளின்பமும் வீடும் பயக்கும்;
புறங்கடை நல்லிசையு நாட்டும்;—உறுங்கவலொன்
றுற்றுழியும் கைகொடுக்கும்; கல்வியி னூங்கில்லை
சிற்றுயிர்க் குற்ற துணை.

(ப-ரை) அறம்-தருமத்தையும், பொருள்-பொருளையும், இன்பம் உம்-இன்பத்தையும், வீடு உம் - மோட்சத்தையும், பயக்கும் - கொடுக்கும்; புறங்கடை-தலைவாயிலில், நல் இசை உம் - நல்ல புகழையும், நாட்டும்-நிலைநிறுத்தும்; உறும்-மிக்க, கவல் ஒன்று-கவலை யாகிய ஒருசெயல், உற்ற உழி உம்-வந்தவிடத்தும், கைகொடுக் கும்-ஊன்றுகோல்போல நிற்கும்; (ஆதலின்) சிறு உயிர் கு - சில வாழ்நாட்களையுடைய வுயிர்கட்கு, உற்ற துணை - பொருந்திய துணை, கல்வி இன் - கல்விப்பொருளைப் பார்க்கிலும், ஊங்கு-மிக்க பொருள், இல்லை - வேறில்லை, எ - று.

(வி-ரை) இதுமுதல் "வேத்தவை காவார்" இறுதியாகக் கல்வியாலாய பயன் கூறுகின்றார். சின்னாட் பல்பிணிச் சிற்றறி

வினை யுடைய வுயிர்கட்கு இம்மைக்குரிய அறமுதலிய மூன்றையும் அவற்றாலாகிய புகழையுந் தருதற்குச் சாதனம் செல்வப் பொருளாயினும் மனக்கவலையை ஒழித்தற்கும் முத்தியை யடைவித்தற்குஞ் சாதனம் ஆகாமையால், அவை எல்லாவற்றையுந் தருதற்குச் சாதனங் கல்வியே யென்பார். 'சிற்றுயிர்க் குற்றதுணை கல்வியினூங்கில்லை' என்றார். உடலோடு கூடி வாழும் உயிரைக் கூறாதலின் உடலின் குணத்தை யுயிர்மே லேற்றிச் 'சிற்றுயிர்க் குற்றதுணை' என்றார். 'இன்பம்' - பண்புப்பெயர்; இனிமை - பகுதி, ஈறும் "இனையவும்" என்றதினால் இகரமுங் கெடுதல் சந்தி, ப் விரித்தல் விகாரம், அம் - விகுதி; இதற் கெதிராகிய துன்பம் என்பது துன்னப்படுவது என்னுஞ் செயப்படுபொருளில் வந்த தொழிற்பெயராகக் கொள்க. வீடு-விடு என்னும் முதனிலை திரிந்து நின்றதனால் முதனிலை திரிந்த தொழிற்பெயர்; 'கவல்' - வினைப் பகுதியே தொழிற்பெயர்ப் பொருளில் வருதலால் முதனிலைத் தொழிற்பெயர்; 'கல்வி' வி-என்னும் விகுதிபெற்று வந்த தொழிற் பெயர்; ஆட்டு - பாட்டு என நெடிற்றொடர்க் குற்றியலுகரவீற்றுப் பகுதியும், உருக்கு - பெருக்கு என்னும் உயிர்த்தொடர்க் குற்றியலுகர வீற்றுப்பகுதியும், தொக்கு - நெக்கு என்னும் முற்றியலுகர வீற்றுப் பகுதியும், இடையில் ஒற்றிரட்டித்துத் தொழிற்பெயராதலும், முடக்கு மடக்கு என்னும் மென்றொடர்க் குற்றியலுகரவீற்றுப் பகுதி விகாரப்பட்டுத் தொழிற்பெயராதலும் உண்டு. 'பயக்கும்', 'நாட்டும்', 'கைகொடுக்கும்' இம் மூன்றும் திணைபால்கட்குப் பொது வினைமுற்றுகள்; இவைபோல்வன வினைமுதலுக்கு முக்கியப் பொருள்களாய் நிற்குமிடத்து வினைமுற்றுகள் எனவும், செய்பவன் முதலிய அறுவகைப் பொருட்பெயரையும் பிறபெயரையுங் கொண்டு முடியுமிடத்துப் பெயரெச்சங்கள் எனவும் படும்; பய - பகுதி, கு - சாரியை, க் - தோற்றமும், உகரக்கேடும் சந்தி, உம் விகுதி. நாட்டு - பகுதி, உகரக்கேடு சந்தி, உம் - விகுதி; இது நடு என்னும் பகுதி முதனீண்டு இடையில் ஒற்றிரட்டித்து நின்றதென்க. ஊங்கு - மிகுதி; இது பொருள்மேல் நிற்றலின் பண்பாகுபெயர். உயிர் - உயிர்த்தல்; இது முதனிலைத் தொழிலாகு

பெயர். 'இன்' உருபு எல்லைப்பொருட்டு. 'உற்றுழி'-உற்ற - ஈறு தொக்க பெயரெச்சம். அறம் பொருள் இறுதியில் எண்ணும்மை தொகுத்தல்; அன்றி,இம்மைக்குரிய பொருள் மூன்றுதலால் இன் பத்தி னிறுதியில் உம்மைகொடுத்துப் பிரித்தார் எனில், அவ் வும்மை முற்றுதல் வேண்டும்; ஆகவே எண்ணும்மை இலக்கணஞ் சிதையும் ஆதலின், இயையாதென்க. 'இசை', 'உழி' என்பவற்றி னிறுதியில் நின்ற வும்மைகள் இறந்தது தழீஇய வுயர்வுசிறப்புப் பொருளன.

---

உ. தொடங்குங்காற் றுன்பமா யின்பம் பயக்கும்;
மடங்கோன் றறிவகற்றுங் கல்வி;—நெடுங்காமம்
முற்பயக்குஞ் சின்னீர வின்பத்தின் முற்றிழாய்!
பிற்பயக்கும் பீழை பெரிது.

(ப-ரை) முற்றிழாய் - தொழில் முடிந்த ஆபரணத்தையுடைய வளே!, மடமை - அறியாமையை, கொன்று - கெடுத்து, அறிவு - அறிவினை, அகற்றும் - விசாலிக்கச் செய்யும், கல்வி - கல்வியானது, தொடங்கும் கால் - ஆரம்பிக்குங்காலத்தில், துன்பம் ஆய் - (முன்பு) சிறிய துன்பத்தைத் தந்து, இன்பம் - (பின்பு) பெரிய இன்பத்தை, பயக்கும் - தரும்; நெடுங் காமம் - பெரிய காமமானது, முன் பயக் கும் - முன்பு தரும், சில் நீர - அற்பத் தன்மையையுடைய, இன் பத்து இன் - இன்பத்தைப்பார்க்கிலும், பின் பயக்கும் - பின்பு தரும், பீழை - துன்பம், பெரிது - மிக்கது, எ-று.

(வி-ரை) கல்வி பெரிதோ, காமம் பெரிதோ என்று வினவி னாற்குக் கல்வி பெரிதென்பார் காமத்தின் குணங் குற்றங்களைக் கூறி விலக்குதற்கு 'முற்பயக்குஞ் சின்னீர வின்பத்தின் பிற்பயக் கும் பீழை பெரிது' என்றனர்; ஆதலின், கல்வியே யிடைவிடாது பயிலவேண்டும் என்பது கருத்து. இது மகடூஉ முன்னிலை; ஆடூஉ முன்னிலையாகக் கூறுதலும் உண்டு. இன்பத்தைத் தரும், அறி யாமையை நீக்கி யறிவினை விரிக்கும் எனவுஞ் சிலர் கூறுவர்

அவ்வாறு கூறில் அறியாமை நீங்கினவிடத்தன்றி யுள்ளவிடத்து இன்பர் தோன்றுமையின், அறியாமையை யழித்தலும் அறிவினை வளர்த்தலு முடைய கல்விக்கு அவற்றை யுடைமையாக்கிப் பயக்கும் என ஒரு முடிபு தந்தனம். காலம் - 'கால்' எனக் கடைக் குறையாய் நின்றது. 'மடங்கொன்று' - ஈறு கெடுதலும், இன வெழுத்துத் தோன்றுதலும் [நன்னூல் - ப - சு - சூத்திரம் ; நெடுங் காமமும் அது, 'நீர' - பண்படியாகப் பிறந்த குறிப்புவினைப் பெய ரெச்சம் ; நீர்மை - பகுதி, ஈறு கெடுதல் சந்தி, அ - விகுதி. 'பெரிது ;' பண்படியாகப் பிறந்த ஒன்றன்பாற் படர்க்கைக் குறிப்பு வினைமுற்று ; பெருமை - பகுதி, ஈறு கெடுதலும், உகரம் இகரமாகத் திரிதலுஞ் சந்தி, து - விகுதி. 'காமம்' - பண்புப் பெயர்ச்சொல் ; இது இறுதிநிலைப் போலியாய்க் காமர் பூங்குழல் எனவும், ஈறு தொக்குக் காமுறு எனவும் வருதல் உண்டு. 'இன்' - எல்லைப்பொருட்டு. 'முற்றிழாய்' - விளியுருபு ; நன்னூல் பெ - சசு - சூத்திரத்துள் அல்லவற்றுயுமாகும். 'அகற்றும்' - பிறவினைப் பெயரெச்சம் ; அகல் - பகுதி, ல் ற் ஆகத் திரிதல் சந்தி ; று - பிறவினை விகுதி, அனைத்தும் ஓர் பகுதி, உகரக்கேடு சந்தி, உம் - விகுதி. முன்பின் என்னும் இடைச்சொற்களி னிறுதி நன்னூல் - மெ - சு - சூத்திரத்தால் இயல்பாகாது ஷை ஷை - ருசு - சூத்திரத்தால் திரிந்தது.

---

ரு. கல்வியே கற்புடைப் பெண்டிரப் பெண்டிர்க்குச்
செல்வப் புதல்வனே யீர்ங்கவியாச்—சொல்வள
மல்லல் வெறுக்கையா மாணவை மண்ணுறுத்துஞ்
செல்வமு முண்டு சிலர்க்கு.

(ப-ரை) கல்வி ஏ - கல்வியே, கற்பு உடை - கற்பினையுடைய, பெண்டிர் ஆ - மனைவியாராகவும், அ பெண்டிர் கு - அம் மனைவியர்க்கு, ஈரம் கவி ஏ - இனிய செய்யுளே, செல்வப் புதல்வன் ஆ - செல்வப் புத் திரனுகவும், சொல் வளம் - (அச் செய்யுளிற் பொருள் விளங்கக் கூறும்) சொல்லின் மாட்சிமையே, மல்லல் - வளப்பம் பொருந்திய,

வெறுக்கை ஆ - செல்வமாகவும், (இருப்பதும் அன்றி) மாண் அவை - பெரியோர் சபையில், மண்ணுறுத்தும் - (அஞ்சாது) அலங் கரிக்கப் பிரசங்கிக்கும், செல்வம் உம்-செல்வமும், சிலர் கு உண்டு- சிலர்க்கு உண்டாம், எ-று.

(வி-ரை) கல்வியின் வல்லோர் பலரிருப்பினும் அவருள் செய் யுளைச் செய்தலும், அதனைப் பொருள் விளங்குஞ் சொல்லாற் புணர்த்தலும் உடையோர் சிலர் என்பதும், அவற்றோடு அவையஞ் சாது பிரசங்கித்தலும் உடையோர் அரியர் என்பதும் இதனாற் கூறப்பட்டது. 'உடை' - ஈறு தொக்க உடன்பாட்டுக் குறிப்பு வினைப் பெயரெச்சம். உடைமை - தொழிற் பண்புப் பகுதி, ஈறு கெடுதலும் ய் தோன்றுதலும் சந்தி, அ - விகுதி, இப் பகுதி யடி யாகப் பிறந்த உடையான் என்னுங் குறிப்பு வினைமுற்றிற்குச் செய்பவன் முதலிய அறுவகைப்பொருளும் உண்டு. 'மண்ணுறுத் தும்' - பிறவினைப் பெயரெச்சம் ; மண் என்னும் முதனிலைத் தொழிற்பெயர் உறு என்னும் உரிச்சொல்லடியாகப் பிறந்த வினைப் பகுதியோடு ணகரச்சந்தி யேற்று நின்ற மண்ணுறு வினைப் பகுதி, த்-சந்தி, து-பிறவினை விகுதி, அனைத்தும் ஓர் பகுதி, உகரக் கேடு சந்தி, உம் - விகுதி. 'ஈர்ங்கவி' - பண்புத் தொகைநிலைத் தொடர் ஆதலின் ஈரம் என்பதின் இறுதி குறைந்து கடைக் குறையாய் நின்ற ஈர் என்பதன் முன் வந்த வல்லெழுத்திற்கு இனவெழுத்து மிகுந்தது, நன்னூல் - மெ - உக - சூத்திரத்துள் "மேல்" என்ற மிகையால். 'வளம்' - பண்புப்பெயர்; வண்மை - பகுதி, ஈறு கெடுதல் சந்தி, அம் - விகுதி, மாண் - பண்பாகு பெயர். வெறுக்கை - பொன். வெறுக்கப்படுவது என்னும் செயப் படுபொருளில் வந்த தொழிற்பெயர் ; வெறு - பகுதி, கு - சாரியை, க் - தோற்றமும்: உகரக்கேடும் சந்தி, ஐ - விகுதி, தொழிலாகு பெயராகக்கொள்ளின் கை விகுதியாகக் கொள்க. 'வெறுக்கையா'- ஈறு கெட்ட வினையெச்சம். வெறுக்கை யென்னும் பெயர்ச் சொல் ஆ என்னும் வினைப் பகுதியோடு கூடி ஒரு சொன்னீர்மைப் பட்டு, ஓர் வினைப்பகுதியாகிக் குச் சாரியையும், அ விகுதியையும் ஏற்று நின்று கெட்டது. இது வருவிக்கப்பட்ட இருப்பது என்னுக்

தொழிற்பெயரோடு முடிந்தது. இது அணியுள் உருவகவணியின் உருபு எனப்படும்; ஆதலின் விருயுருவகவணி.

[தண்டி யலங்காரம்.]

" உவமையும் பொருளும் வேற்றுமை யொழிவித்
தொன்றெனை மாட்டி னஃ துருவக மாகும்."

---

௪. எத்துணைய வாயினுங் கல்வி யிடமறிந்
துய்த்துணர் வில்லெனி னில்லாகும்—உய்த்துணர்ந்துஞ்
சொல்வன்மை யின்றெனி னென்னா மஃதுண்டேல்
பொன்மலர் நாற்ற முடைத்து.

(பதவுரை) எத்துணைய ஆயின் உம் - எவ்வளவின ஆனாலும், இடம் அறிந்து - நல்லாசிரியனைத் தெரிந்து, கல்வி - கல்வியை, உய்த்து உணர்வு - ஆராய்ந்தறிதல், இல் எனில் - இல்லையானால், இல் ஆகும்-(அக் கல்வி பயன்படுதல்) இல்லையாகும்; உய்த்துணர்ந்தும் - (அவ்வாறு தெரிந்து) ஆராய்ந்தறிந்தும், சொல் வன்மை-(பிறருக்குச்) சொல்லும் வலிமை, இன்று எனின் - இல்லையானால், என் ஆம்-(அவ் வாராய்ச்சி) என்ன பயன்படும்?, அஃது-அச் சொல் வன்மை, உண்டு ஏல்-உளதானால், பொன் மலர்-பொன்னாற் செய்த மலர், நாற்றம் உடைத்து - வாசனையை யுடையதுபோலும், எ-று.

(வி-ரை) கற்கப்புகுவோன் ஐயம் திரிபற வுணர்த்தும் நல்லாசிரியனைத் தெரிந்து கற்கவேண்டும் என்பார் 'உய்த்துணர்வில்லெனி னில்லாகும்' எனவும், அவ்வாறு கற்றுணர்ந்தும் பொருள் விளங்கச் சொல்லும் வலிமை இல்லை ஆனால் அவ் வுணர்ச்சி பயன் படாது என்பார் 'என்னும்' எனவும், அச் சொல்வன்மை உளதாதல் அரிது என்பார் 'பொன்மலர் நாற்றம் உடைத்து' எனவுங் கூறினார். 'உண்டு' - பண்படியாகப் பிறந்த ஒன்றன்பாற் படர்க்கைக் குறிப்பு வினைமுற்று, 'ஏல்' என்னும் எச்சத்தோடு முடிதலின் வினைமுற்று எச்சம் ஆம்; உண்மை-பகுதி, ஈறு கெடுதலும்: ள் இனவெழுத்தாகத் திரிதலும் சந்தி, டு - விகுதி; இது

ஐம்பால் மூவிடங்களில் வரில் தேற்றப்பொருளில் வந்த தொழிற் பெயர் எனக் கொள்க. 'உய்த்து' - இறந்தகால வினையெச்சம்; உய் - பகுதி, த் - சந்தி, த் - இடைநிலை, உ - விகுதி; இது உணர்வு என்னுந் தொழிற்பெயரோடு முடிந்தது. வினையெச்சங்கள் தெரிநிலை, குறிப்பு என்னும் வினை விகற்பங்களோடும், அவ் வினைத் தொழிற்பெயர்களோடு முடியும். 'பொன்மலர்' - மூன்ரு முருபும் பயனுந் தொக்க தொகை; பயன் ஆவது உருபை முடிக்குஞ் சொல்; அதனை நன்னூல்-பெ-௬௨-சூத்திரத்தால் அறிக. உம்மை இரண்டும் உயர்வுசிறப்புப் பொருளன; 'ஏல்' - வினையெச்சத் தின்மேல் நின்றது குறிப்பு.

---

ரு. அவையஞ்சி மெய்விதிர்ப்பார் கல்வியுங் கல்லார்
அவையஞ்சா வாகுலச் சொல்லும்—நவையஞ்சி
ஈத்துண்ணுர் செல்வமு நல்கூர்ந்தா ரின்னலமும்
பூத்தலிற் பூவாமை நன்று.

(ப-ரை) அவை அஞ்சி - (கற்ரோர்) சபையை யஞ்சி, மெய் விதிர்ப்பார் - சரீரம் நடுங்குவோர்க்கு, கல்வி உம் - கல்வியும், கல்லார் - கற்றறிவில்லார்க்கு, அவை - (கற்ரோர்) சபையை, அஞ்சா - அஞ்சாமற் பேசும், ஆகுலம் சொல் உம் - ஆரவாரச் சொற்களும், நவை அஞ்சி - (கொடாமையால் வரும்) குற்றத்தை யஞ்சி, ஈந்து - (பிறருக்குக்) கொடுத்து, உண்ணுர் - (தாமும்) அனுபவியார்க்கு, செல்வமும் - செல்வப்பொருளும், நல்கூர்ந்தார் - வறுமை யடைந்தாருக்கு, இன் நலம் உம்-இனிய தாட்சிணியமும், பூத்தல் இன் - உண்டாதலைப் பார்க்கிலும், பூவாமை - உண்டாகாமையே, நன்று - நல்லது, எ-று.

(வி-ரை) 'மெய் விதிர்ப்பார்' - உயர்திணையொடு சார்ந்த அஃறிணை உயர்திணை முடிபேற்றது திணைவழுவமைதி; [நன்னூல் - பொ - உ௬ - சூத்திரம்.] 'ஆகுலச் சொல்' - ஆரவாரமாகிய சொல் என நிற்றலிற் பண்புத் தொகைநிலைத்தொடர். 'அஞ்சி' - இறந்தகால வினையெச்சம்; அஞ்சு - பகுதி, உகரக்

கேடு சந்தி, இ - விகுதி, இது உண்ணார் என்னும் எதிர்மறை வினைமுற்றின் முதனிலையோடு முடிந்தது. 'ஈத்து' - வலித்தல் விகாரம். 'நல்கூர்ந்தார்' - இறந்தகால வினைமுற்றுப் பெயர்; நல்கூர் - பகுதி, ந் - சந்தி, த் - இடைநிலை, ஆர் - விகுதி; 'நல்குரவு' என்னும் பெயர்ச்சொல் வினைப் பகுதியாமிடத்து நல்கூர் என விகாரப்பட்டு நிற்கும். 'பூத்தல்' - உடன்பாட்டுத் தொழிற் பெயர். 'பூவாமை' - எதிர்மறைத் தொழிற்பெயர்; இது உடன் பாட்டில் வரும்போது இறந்தகால நிகழ்கால இடைநிலைகள் பெற்றுப் பூத்தமை, பூக்கின்றமை என வரும். 'சொல்,' 'செல்வம்' இரண்டும் சாதி யொருமைகள். 'விதிர்ப்பார்' - உயர்திணைப் பலர்பாற் படர்க்கை வினைமுற்றுப்பெயர்; விதிர் - பகுதி, ப் - சந்தி, ப் - எதிர்கால இடைநிலை, ஆர் - விகுதி.

---

௬. கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினும்
மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான்—மலரவன்செய்
வெற்றுடம்பு மாய்வனபோன் மாயா புகழ்கொண்டு
மற்றிவர் செய்யு முடம்பு.

(ப-ரை) கலைமகள் - சரசுவதியினது, வாழ்க்கை - வாழ்வு, முகத்தது எனின் உம் - முகத்தினிடத்ததா யிருந்தாலும், மலரவன் - பிரமன், செய் - படைக்கும், வெறுமை உடம்பு - பயனில்லாத சரீரம், மாய்வனபோல் - அழிதல்போல, இவர் - இவ்வுலகிலுள்ள புலவர்கள், செய்யும் - படைக்கும், மற்று உடம்பு - நூலாகிய சரீரம், புகழ் கொண்டு - புகழைக் கொண்டு, மாயா - அழியா; (ஆதலின்) மலரவன் - அப் பிரமன், வண்மை தமிழோர்க்கு - வளப்பமுடைய தமிழ்ப் புலவர்க்கு, ஒவ்வான் - ஒப்பாகான், எ-று.

(வி-ரை) 'கலைமகள்' - நூலிற்குரிய பெண்; "வாக்கின் செல்வி" என்பதனாலும் அறிக. 'மலரவன்' - தாமரைமலரிலிருப்பவன். "திரவிடம்" என்னும் வடசொல் திரமிடம் எனத் திரிந்து தமிளம் என்றாகித் 'தமிழ்' என நின்றது; அன்றித்

தமிழ் - இனிமை; அது பண்பாகுபெயராய் அப் பாஷையின் மேல் நின்றதெனினும் அமையும். குவ்வுருபு ஒவ்வான் என்னும் இடைச்சொல்லடியாகப் பிறந்த எதிர்மறை வினைமுற்றின் முத னிலையோடு முடிந்தது. ஒ - இடைச்சொல் லடியாகப் பிறந்த வினைப்பகுதி; உடம்படு மெய்யால் வந்த வகரமும், அம் மெய் யிரட்டித்தலும் சந்தி, ஆ - எதிர்மறை விகுதி, அனைத்தும் ஓர் பகுதி, ஆன் - விகுதி, விகுதியின் ஆகாரம் முதற்குறை, எதிர் மறை ஆகாரவிகுதி மூன்று காலத்திற்கும் பொதுவாம். இல் என்னும் எதிர்மறை விகுதி இறந்தகால நிகழ்கால இடைநிலை களைப் பெற்று வரும்; ஒத்திலன், ஒக்கின்றிலன். 'மாய்வன' - இடைநிலை பெற்று வந்த தொழிற்பெயர், மாய் - பகுதி, வ் - எதிர் கால இடைநிலை, அன்-சாரியை, அ-விகுதி; வினைமுற்றுப்பெயர் எனல் ஆகாதோ எனில், புடை பெயர்ச்சியையுடைய பொரு ளில்லாமையால் ஆகாதென்க. 'உடம்பு' - பால்பகா அஃறிணைப் பெயர் ஆதலின் 'மாயா' என்னும் பன்மைவினை கொண்டது; இம் முடிபால் அது பொதுமை நீங்கி நின்றது காண்க [நன்னூல் - பெ - உ ச - சூத்திரம்; ஷை - பொ - அ - சூத்திரம்]. 'மற்று' - பிறிது பொருளில் வந்த இடைச்சொல். 'மலரவன்,' 'தமிழோர்' இவற்றின் முதலில் அகரச் சுட்டுத் தொகுத்தல். பிரமனையும் புலவரையும் ஒப்புமை செய்து பின்பு தொழிலான் வேறுபடுத்தி அப்புலவரை யுயர்த்திக் கூறுதலின் வேற்றுமையணி

[தண்டியலங்காரம்,]

"கூற்றினுங் குறிப்பினு மொப்புடை யிருபொருள்
வேற்றுமைப் படவரின் வேற்றுமை யதுவே."

---

எ. நெடும்பகற் கற்ற வவையத் துதவா
துடைந்துளா ருட்குவரும் கல்வி—கடும்பகல்
ஏதிலான் பாற்கண்ட வில்லினும் பொல்லாதே
தீதென்று நீப்பரி தால்.

(ப-ரை) நெடும் பகல் - பலநாள், கற்ற - (தாம்) கற்ற நூற் பொருள்கள், அவையத்து - (கற்றோர்) சபையில், உதவாது - உதவாமல், உடைத்துளார் - தோற்றவராது, உட்கு வரும் - நாணத்தக்க, கல்வி - அக் கல்வியானது, கடும் பகல் - நடுப்பகலில், ஏதிலான்பால் - அயலானிடத்து, கண்ட - (இருக்கப்) பார்த்த, இல் இன் உம் - மனையாளைப் பார்க்கினும், பொல்லாது - கொடிது; (ஏனெனில்), (அம் மனையாளைக் கொடியள் என நீக்குதல் போல) தீது என்று - (அக் கல்வியைக்) கொடிதென்று, நீப்பு அரிது நீக்குதல் கூடாது, (ஆதலின்), எ-று.

(வி-ரை) உதவாதிருத்தலில் தாம் கற்ற கல்வி தமக்கே நாணைத் தருதலில், உட்கு வரும் வினைக்குக் கல்வியையே வினை முதலாக்கி 'உட்குவரும் கல்வி' என்றார்.

கற்ற நூல்கள் சபையிலுதவ இடைவிடாது பயிலவேண்டும் என்பது இதனது கருத்து.

கடும்பகல் - மிக்க பகல்; அது உரிச்சொற் றொகாநிலைத் தொடர். 'கடி'-மிகுதிப் பொருளை யுணர்த்தும் உரிச்சொல், கடு எனத் திரிந்து பொதுவிதி பெறாது வருமொழிமுதல் வல்லெழுத்திற்கு இனவெழுத்து மிகுந்தது. 'நெடும்பகல்' - பண்புத் தொகைநிலைத் தொடர். 'ஏதிலான்' - காரணப்பெயர்; ஏதில்-பகுதி, ஆன்-விகுதி. 'பகல்' - தொழிலாகுபெயர்; பகு-பகுதி, உகரக்கேடு சந்தி, அல் - விகுதி; இது பிளவுபடுதல் என்னும் பொருட்டு. 'கற்ற' - இறந்தகால வினைமுற்றுப் பெயர்; இப் பெயர்க்கு வினைமுதல் பொருளாகாது செயப்படுபொருளானமை காண்க; கல்-பகுதி, ல் ற் ஆகத் திரிதல் சந்தி, ற்-இடைநிலை, அ-விகுதி; இம் முற்றே பெயரெச்சமாக வரும்போது இறுதி பெயரெச்ச விகுதியாகக் கொள்க. கற்றன என அன் சாரியை பெற்று வரின் பெயரெச்சம் ஆகாதெனக் கொள்க. 'உதவாது'-எதிர்மறை வினையெச்சம்; உதவு - பகுதி, உகரக்கேடு சந்தி, ஆ - எதிர்மறை விகுதி, அனைத்தும் ஒரு பகுதி, து - விகுதி. 'பொல்லாது', 'தீது', 'அரிது' மூன்றும் ஒன்றன்பாற் படர்க்கைக் குறிப்பு

முற்றுகள். பொல்லாமை-பகுதி, ஈறு கெடுதல் சந்தி, து-விகுதி, இது பொல்லாப்பு, பொல்லாங்கு எனப் பண்புப்பெயர் விகுதிக ளேற்றுப் பண்புப்பெயர் ஆக வரும். 'நீப்பு' - தொழிற்பெயர்; நீ - பகுதி, ப் - சந்தி, பு - விகுதி. கல்வியின் முதலில் அகரச்சுட்டுத் தொகுத்தல். 'ஆல்' - அசை. 'உட்கு வரும்' - இடைப்பிறவரல்.

---

அ. வருந்தித்தாங் கற்றன வோம்பாது மற்றும்
பரிந்துசில கற்பான் றொடங்கல்—கருந்தனம்
கைத்தலத்த வுய்த்துச் சொரிந்திட் டரிப்பரித்தாங்
கெய்த்துப் பொருள் செய்திடல்.

(ப-ரை) தாம் வருந்தி - தாம் வருத்தமுற்று, கற்றன - கற்ற நூற்பொருள்களை, ஓம்பாது - பாதுகாவாமல், மற்று உம் சில - வேறு சில நூல்களை, பரிந்து - வருந்தி, கற்பான் தொடங்கல் - கற்கப் புகுதல், கைத்தலத்த - கையிற் கிடைத்த, கருந்தனம் - பெரிய திரவியத்தை, உய்த்து சொரிந்திட்டு - புறத்தில் வீசி யெறிந்து, அரிப்பு அரித்து - அரிப்பினை யரித்து, எய்த்து - இளைத்து, பொருள் செய்திடல் - பொருளைச் சேகரித்தலை யொக்கும், எ-று.

(வி-ரை) கற்ற நூற்பொருளைப் பலகாலுஞ் சிந்திக்கவேண் டும் என்பது கருத்து.

'சில' - பலவின்பாற் படர்க்கைக் குறிப்பு வினைமுற்றுப் பெயர்; சின்மை - பகுதி, ஈறு கெடுதல் சந்தி, அ - விகுதி. 'கற்பான்' - எதிர்கால வினையெச்சம்; கல் - பகுதி, ல் ற் ஆகத் திரிதல் சந்தி, பான் - எதிர்கால வினையெச்ச விகுதி; வினை முற்று ஆயின் ப் - இடைநிலை, ஆன் - விகுதி. 'உய்த்து' - இறந்தகால வினையெச்சம்; உய் - பகுதி, த் - சந்தி, த் - இடை நிலை, உ - விகுதி; இப் பகுதி பிழைத்து என்னும் பொருளில் வரின் 'உய்ந்து' என மெல்லெழுத்துச் சந்தி பெற்று வரும்; பகுதி ஒன்றே சந்தி வகையால் பொருள் வேறுபடுதல் காண்க. 'ஓம்பாது' - எதிர்மறை வினையெச்சம்; ஓம்பு - பகுதி, உகரக்

கேடு சந்தி, ஆ - எதிர்மறை விகுதி, அனைத்தும் ஓர் பகுதி, து - விகுதி. 'சொரிந்திட்டு,' 'எய்த்து'-இவ் விரண்டும் உடன் பாட் டிறந்தகால வினையெச்சம்; 'சொரி' என்னும் வினைப் பகுதி சந்தியையும்: து சாரியையும்: இடு என்னும் பகுதிப்பொருள் விகுதியையும் ஏற்று அனைத்தும் ஓர் பகுதியாய் நின்ற சொரிந் திடு - வினைப்பகுதி, பகுதி இரட்டித்தல் இடைநிலை, உகரக்கேடு சந்தி, உ - விகுதி. எய் - பகுதி, த் - சந்தி, த் - இடைநிலை, உ - விகுதி. 'அரிப்பு': அரித்தலையுடைய பொருள்மேல் நிற்ற லில் தொழிலாகுபெயர்; அரி - பகுதி, ப் - சந்தி, பு - விகுதி. 'கைத்தலத்த' - சினையடியாகப் பிறந்த குறிப்புவினைப் பெயரெச் ம்; கைத்தலம் - பகுதி, அத்து - சாரியை, பகுதி யீற்று மாகச மெய்யும் :!சாரியையின் அகரமும் : ஈற்றுகாமுங் கெடுதல் சந்தி, அ - விகுதி. 'ஆங்கு,' 'உம்' - அசைநிலைகள். (அ)

---

கூ. எனைத்துணைய வேனு மிலம்பாட்டார் கல்வி
தினைத்துணையுஞ் சீர்பா டிலவாம்—மனைத்தக்காள்
மாண்பில ளாயின் மணமக னல்லறம்
பூண்ட புலப்படா போல்.

(ப-ரை) மனை தக்காள் - இல்லறத்திற்குத் தக்க மனைவி யானவள், மாண்பு - நற்குணம், இலள் ஆயின் - இல்லாதவ ளானல், மணமகன் - அவள் கணவன், பூண்ட - மேற்கொண்ட, நல் அறம் - நல்ல தருமங்கள், புலப்படா - விளங்கா; போல் - அது போல, இலம்பாட்டார் - தரித்திரரது, கல்வி - கற்ற நூல்கள், எனைத்துணைய ஏனும் - எவ்வளவு பெருமையையுடையன வாளு லும், தினை துணை உம் - தினையளவும், சீர்பாடு - சிறப்படைதல், இல ஆம் - இல்லையாம், எ-று.

(வி-ரை) கணவன் செய்யும் அறத்திற்கு மனைவி ஒத்த கருத் தினள் ஆதல் வேண்டும் என்பார் 'மாண்பிலளாயில் நல்லறம் புலப் படா' என்றார்.

தரித்திரர் கற்ற கல்வி பயன்படாது என்பது கருத்து.

" ஆவிற்கு இரு கோடு தோன்றினாற்போல் " என உவமை முகத்தால் நச்சினார்க்கினியர் கூறினார். 'கல்வி' - தொழிலாகு பெயர்; கல் - பகுதி. வி - விகுதி. 'திணை' - அரிசிமேல் நிற்ற லில் பொருளாகுபெயர்; அன்றி, ஓரளவை யெனினும் ஒக்கும். 'பாடு'-படுதல்; படு என்னும் வினைப்பகுதி முதனிலை திரிந்து நின் றது. 'இலம்பாடு' - இல்லாமை யுண்டாதல்; அதாவது, வறுமை. 'மனைத்தக்காள் மாண்பிலளாயின்' - உயர்திணையொடு சார்ந்த அஃறிணை உயர்திணை முடிபேற்றது திணைவழுவமைதி, [நன் னூல் - பொ - உகூ - சூத்திரம்]. இன்மைப் பண்புக்குச் செயப்படு பொரு ளிருத்தலின் மாண்பை யிலளாயின் எனக் கொள்ளினும் அமையும். 'கல்வி இல', 'நல்லறம் புலப்படா' எனப் பன்மை முடிபேற்றலில், 'நூல்கள்,' 'அறங்கள்' என்றனம். 'புலப்படா போல்'- வினைமுற்றுதலால் வருமொழி வல்லெழுத் தியல்பு ஆயிற்று. [நன்னூல் - உ - உக - சூத்திரம்]. உம்மை இழிவுசிறப்புப் பொருட்டு.

---

கo. இன்சொல்லன் றாழ்நடைய னாயினுமோன் றில்லானேல்
வன்சொல்லி னல்லது வாய்திறவா—என்சொலினுங்
கைத்துடையான் காற்கீ ழொதுங்குங் கடன்ஞாலம்
பித்துடைய வல்ல பிற.

(ப-ரை) இன் சொல்லன் - (ஒருவன்) இனிய சொல்லை யுடையவனும், தாழ் நடையன் - பணிந்து நடக்கும் நடையை யுடையவனும், ஆயினும்-ஆனாலும், ஒன்று இல்லான் எல் - பொருள் சிறிதும் இல்லானாயின், கடல் ஞாலம் - கடல் சூழ்ந்த வுலகிலுள் ளோர், வன் சொல் இன் அல்லது-(அவனை நோக்கிக்) கடுஞ்சொற் சொல்லுவார்களே யல்லாமல், வாய் திறவா - இனிய சொற்களைச் சொல்லார்; கைத்து உடையான் - பொருள் உடையவன், என் சொல் இன் உம் - யாது சொன்னாலும், கால் கீழ் - (அவனது)

காலின் கீழ், ஒதுங்கும் - ஒதுங்குவார் ; (ஆதலால்) பித்து உடைய - பயித்தியகுண முடையவரே (அல்லாமல்), பிற அல்ல - அது ஒழிந்த நற்குணம் உடையவ ரல்லர், எ-று.

(வி-ரை) உலகு : உயிர்க்குறுதியைத் தரும் ஒருவனது நல்லொழுக்க முடைமையை நோக்காது, அழியுந் தன்மைத்தாகிய பொருளுடைமையை நோக்கி மதித்தல் பெருங் குற்றம் ஆதலின் 'பித்துடைய' எனக் கூறியும் அமையாது 'பிறவல்ல' என அதனதறியாமையைப் பின்னும் வற்புறுத்திக் கூறினர். நல்லொழுக்க முடையோர்க்கன்றி மற்றையோர்க்கு இன்சொல் சொல்லுதலும் பணிந்து நடத்தலும் இலவாதலின் அவ் விரண்டையும் எடுத்துக் கூறினர். 'ஞாலம்' மக்கள்மேல் நிற்றலின் இடவாகுபெயர் ; இது பொருணிலையால் உயர்திணையேனும் சொன்னிலையால் பால் பகா அஃறிணைப்பெயராதலின் 'வாய்திறவா', 'ஒதுங்கும்,' 'உடைய', 'அல்ல' என அஃறிணை முடிபு தந்து கூறினர். 'ஒன்று' - இதனிறுதியில் எதிர்மறையின்கண் வந்த இழிவுசிறப்பும்மை தொகுத்தல்; அல்லது, பண்படியாகப் பிறந்த எதிர்மறைக் குறிப்பு வினையெச்சம் ; அல் - பகுதி, ல் - சந்தி, அ - சாரியை, து - விகுதி, இப் பகுதியே எதிர்மறைப் பொருளைத் தந்து நிற்றலின் இடையே எதிர்மறை யுருபு பெறாது சாரியை பெற்று வரும். இன்மை, அன்மை என்னும் இரண்டினடியாகவே இவ் எதிர்மறைக் குறிப்புவினையின் விகற்பங்கள் தோன்றும். இல்லாமை, இல்லாத, இல்லாது, இல்லாதது என தொழிற்பெயர், பெயரெச்சம், வினையெச்சம், முற்று வருமாறு காண்க. நடவாது என, வினைப்பகுதியோடு எதிர்மறை யுருபு இடையில் வரின் எதிர்மறைத் தெரிநிலைவினை யெனப்படும். 'கடன்ஞாலம்'- வருமொழி முதல் மெல்லெழுத்தாதலின் லகரம் னகரம் ஆகத் திரிந்தது, [நன்னூல் - மெ - உச - சூத்திரத்துள் "மெலிமேவி னணவும்" என்பதனால், 'கைத்து' - 'கையி லுள்ளது' என நிற்றலின் சினையடியாகப் பிறந்த குறிப்பு வினைமுற்றுப் பெயர் ; கை - பகுதி, த் - சந்தி, து - விகுதி.

கக. இவறன்மை கண்டு முடையாரை யாரும்
குறையிரந்துங் குற்றேவல் செய்ப—பெரிதுந்தாம்
முற்பக னோலாதார் நோற்றாரைப் பின்செல்லல்
கற்பன்றே கல்லாமை யன்று.

(ப-ரை) இவறன்மை - உலோபகுண முடைமையை, கண்டு உம் - தெரிந்திருந்தும், உடையார் ஐ - பொருளுடையவர்களை, யார் உம் - எவரும், குறை இரந்து - (தமது) குறைகளைச் சொல்லி யிரந்து, குற்றேவல் உம் - சிறிய ஏவலையும், செய்ப - செய்வார்கள் ; பெரிது உம் - மிகவும், முன் பகல் - முன்னாளில், நோலாதார் - தவஞ் செய்யாதவர்கள், நோற்றார் ஐ - தவஞ் செய்தவர்களை, பின் செல்லல் - பின்பற்றிச் செல்லுதல், கற்பு ஏ அன்று - அறிவே அல்லாமல், கல்லாமை அன்று - அறிவில் லாமை யல்ல, எ-று.

(வி-ரை) "உலோபகுண முடையவரைப் பின்பற்றிச் செல்லல் அறியாமை" என உலகினர் கூறுங் கூற்றை மறுப்பார் முன் னாளில் தவமுடையவரைத் தவ மில்லார் பின்பற்றிச் செல்லல் முறை யாதலில், 'கற்பன்றே கல்லாமை யன்று' என்றார் ;

[திருக்குறள்-அறத்துப்பால்-துறவறவியல்-உகஈ-அதி.-தவம்-க0]

"இலர்பல ராகிய காரண நோற்பார்
சிலர்பலர் நோலா தவர்."

என்றார் பிறரும். 'இவறல்' என்னுந் தொழிற்பெயர் தன்மைப் பொருளை யுணர்த்தும் மை விகுதியோடு கூடி ஒருசொன்னீர்மைத் தாய் நின்றது ; அன்றித் தன்மை யென்பது முதற்குறையாய் நின்றதெனினு மமையும், ஆண்மை, பெண்மை என வருதலுங் காண்க ; இவறு - பகுதி, உகரக்கேடு சந்தி, அல் விகுதி ; எச்சம் முற்றுகளில் வரும்போது இவறின, இவறி, இவறினன் என வரும். 'செய்ப' - உயர்திணைப் பலர்பால் வினைமுற்று ; செய் - பகுதி, ப் - விகுதி, இவ் விகுதி எதிர்காலங் காட்டியது ; பலவின்பாலில் வரில் ப் - இடைநிலை, அ - விகுதி. 'நோற்றார்' - உடன்பாட்டு

வினைமுற்றுப்பெயர்; 'சோலாதார்' - எதிர்மறை வினைமுற்றுப் பெயர்; சோல் - பகுதி, ற் - இடைநிலை, ல் ற் ஆகத் திரிதல் சந்தி, ஆர் விகுதி. 'அன்று' இரண்டனுள் முன்னது அன்றி என்னும் வினையெச்சத் திரிபு எனவும், பின்னது குறிப்பு வினை முற்று எனவுங் கொள்க; அல் - பகுதி, று - விகுதி, ல் இன வெழுத்தாகத் திரிதல் சந்தி. 'கற்பு' - உடன்பாட்டுத் தொழிற் பெயர். 'கல்லாமை' - எதிர்மறைத் தொழிற்பெயர்; இவை அறிவு அறியாமை எனக் காரணத்தைக் காரியம் ஆக உபசரிக்கப் பட்டன. கல் - பகுதி, ல் ற் ஆகத் திரிதல் சந்தி, பு - விகுதி, எவலின் இறுதியின் உம்மை 'இரந்து' என்பதன் இறுதியிலும், 'கற்பு' இறுதியின் ஏ 'அன்று' இறுதியிலும் நின்றன பொருத்தமில் புணர்ச்சி. உம்மை மூன்றனுள் முன்னது முற்றுப்பொருள், நடு வது இறந்தது தழீஇய எச்சப்பொருள், இறுதியது அசைநிலைப் பொருள்.

---

கஉ. கற்றோர்க்குக் கல்வி நலனே கலனல்லால்
மற்றோ ரணிகலம் வேண்டாவாம் - முற்ற
முழுமணிப் பூணுக்குப் பூண்வேண்டா யாரே
அழகுக் கழகு செய்வார்.

(ப-ரை) முழு மணி - பருத்த இரத்தினங்கள் (அழுத்திய) பூணுக்கு - ஆபரணத்துக்கு, முற்ற - எப்போதும், பூண் வேண்டா - (அழகு செய்ய) வேறாபரணம் வேண்டுவன இல்லை; (அதுபோல) கற்றோர் கு - (நூல்களைக்) கற்றவர்க்கு, கல்வி நலன் ஏ - கல்வியி னழகே, கலன் அல்லால் - ஆபரணமல்லாமல், மற்று ஓர் அணி கலம் - வேறொரு ஆபரணம், வேண்டா ஆம் - (அழகு செய்ய) வேண்டுதல் இல்லையாம்; அழகு கு - அழகினுக்கு, அழகு செய் வார் - அழகு செய்பவர், யார் - (உலகில்) எவர்? (இல்லையென்ற படி), எ-று.

(வி-ரை) 'நலம்' 'கலம்' என்பவற்றி னிறுதி மகரமெய் னகரமெய்யாய் நின்றது இறுதிநிலைப் போலி; "நலன், கலன் என

நிற்றல் இயல்பு" எனவும், "மகரமெய்யாதல் போலி" எனவும் ஓர் நூலாசிரியர் கூறுகின்றனர். 'அல்லால்' - எதிர்மறை வினையெச்சம்; அல் - பகுதி, ல் - சந்தி, ஆ - சாரியை, மல் - விகுதி, விகுதியின் மகரம் மூதற்குறை. 'வேண்டா' - பலவின்பாற் படர்க்கை முற்று; வேண்டு - பகுதி, உகரக்கேடு சந்தி, ஆ - விகுதி; இது எதிர்மறைக்கன்றி உடன்பாட்டிற்கு வாராது. 'பூண்' - செயப்படுபொருளில் வந்த இகரவிகுதியொடு புணர்ந்து குன்றிய தொழிற்பெயர். 'முற்ற' - இறுதியில் முற்றும்மை தொகுத்தல். 'எ' இரண்டனுள் முன்னது பிரிநிலை, பின்னது அசைநிலை. 'பூணுக்குப் பூண் வேண்டா' எனக் கூறியும் அமையாது, 'அழகிற் கழகு செய்வார் யார்' எனப் பின்னுங் கூறியது முன்பு தொடங்கிய ஒருபொருளை முடித்தற்காதலில் வேற்றுப் பொருள் வைப்பணி.

[தண்டியலங்காரம்]

"முன்னொன்று தொடங்கி மற்றது முடித்தற்குப்
பின்னொரு பொருளி னுலகறி பெற்றி
ஏற்றிவைத் துரைப்பது வேற்றுப்பொருள் வைப்பே."

---

கரு. முற்று முணர்ந்தவ ரில்லை முழுவதூஉங்
கற்றன மென்று களியற்க - சிற்றுளியால்
கல்லுந் தகருந் தகராகனங்குழாய்!
கொல்லுலைக் கூடத்தி னால்.

(ப-ரை) கனம் குழாய் - கனத்த காதணியை யுடையவளே!, சிறு உளி ஆல் - (உருவில்) சிறிய வுளியினால், தகரும் கல் உம் - உடைபடுங் கல்லும், கொல் உலை - கொல்லன் உலைக்களத்தினுள்ள, கூடத்தின் ஆல் - (உருவில் பெரிய) சம்மட்டியினால், தகரா - உடைபடா; (ஆதலின்) முற்று உம் - (நூல்) முழுமையும், உணர்ந்தவர் - அறிந்தவர், இல்லை - (உலகில்) இல்லை; (ஆக) முழுவதூஉம் - முழுமையும், கற்றனம் என்று - (யாம்) கற்றோமென்று, களியற்க - அகங்கரித்த லொழியக்கடவன், எ-று.

(வி-ரை) பெரிய கல்வி யுடையோரும் சிறிய கல்வி யுடையோரா லவமதிக்கப்படுவர் ஆதலின் செருக்கடைத லொழிக என்பது இதனது கருத்து.

[அறநெறிச்சாரம்]

"பலகற்றேம் யாமேன்று தற்புகழ வேண்டாம்
அலர்கதிர் ஞாயிற்றைக் கைக்குடையுங் காக்கும்
சிலகற்றார் கண்ணு முளவாம் பலகற்றார்க்
கச்சாணி யன்னதோர் சொல்."

'குழை' - காதணியு ளொன்று, 'முழுவது' - உரிச்சொல்; இது பண்பாய் நூலை யுணர்த்தி, அவ் வாகுபெயராய் நின்றது; முழுமை - பகுதி, ஈறு கெடுதலும், வ் தோற்றமும் சந்தி, அது - பகுதிப்பொருள் விகுதி. 'முழுவதூஉம்' - இன்னிசை நிறைத்தற்கண் வந்த வுயிரளபெடை; இவ் வளபெடை இடையில் உள்ள உகரம் விகாரப்பட்டு அளபெடுக்கும். சொல்லிசை நிறைக்க வரும் அளபெடை இகரவீற்று வினையெச்சம் அவ் ஈறு தோன்ற நின்றும், தனக்கினமாகிய யகர மெய்யீறு பெற்றும், உகரவீற்று வினையெச்சம் அவ் ஈறு தோன்ற நின்றும் அளபெடுக்கும். மருவி-மரீஇ, விரவி - விராய், வாய்மடுத்து - வாய்மடூஉ. 'களியற்க' - எதிர்மறை வியங்கோள் வினைமுற்று. களி - பகுதி, ய் - சந்தி, அல் - எதிர்மறை விகுதி. அனைத்தும் ஓர் பகுதி, ல் ற் ஆகத் திரிதல் சந்தி, க - விகுதி, இது ஈறு கெட்டுக் களியல் என நின்று வியங்கோட் பொருளிலும், எதிர்மறை யொருமை யேவற் பொருளிலும் வரும். 'கொல்' -சாதிப்பண்புப்பொருளை யுணர்த்தி அவ்வாகுபெயராய் நின்றது. உம்மை இரண்டும் முற்றுப்பொருளன. 'கனங்குழாய்'-விளியுருபு.

---

கச. தம்மின் மெலியாரை நோக்கித் தமதுடைமை
அம்மா பெரிதேன் றகமகிழ்க—தம்மினுங்
கற்றாரை நோக்கிக் கருத்தழிக கற்றதெல்லாம்
எற்றே யிவர்க்கு நாமேன்று.

(ப-ரை) தம் இன் - தம்மைப்பார்க்கிலும், மெலியார் ஐ - எளியாரை, நோக்கி - பார்த்து, தமது உடைமை - தமது பொருளுடைமை, அம்மா - மிகவும், பெரிது என்று - பெரியதென்று கருதி, அகம் மகிழ்க - மனம் மகிழக்கடவன் ; (அதுபோல் அன்றி) தம் இன் உம் - தம்மைப்பார்க்கிலும், கற்றார் ஐ - கற்றவரை, நோக்கி - பார்த்து, நாம் கற்றது - நாம் கற்ற கல்வி, எல்லாம் - எல்லா நூல்களையும் (உணர்ந்த), இவர் கு - இவர் முன், எற்று - எத்தன்மைத்தாமென்று கருதி, கருத்து அழிக - மனம் வருந்தக் கடவன், எ-று.

(வி-ரை) பொறாமைமுதலிய தீக்குணங்கள் கெடத் தம்மினுஞ் செல்வமுடையாரை நோக்கி யடங்கவேண்டும் என்பார் 'எளியாரை நோக்கித் தமதுடைமை பெரிதென் றகமகிழ்க' எனவும், தாம் கற்றது அமையுமென்று ஒழியாது மேலுமேலுங் கற்கவேண்டும் என்பார் 'தம்மினுங் கற்றாரை நோக்கிக் கருத்தழிக' எனவுங் கூறினார். 'அம்மா'-வியப்புப் பொருளைத் தரும் இடைச்சொல்லாதலில் 'மிகவும்' எனப் பொருள் கூறினாம். 'இன்' உருபு இரண்டும் எல்லைப்பொருளன. 'உடைமை'-பண்படியாகப் பிறந்த தொழிற்பெயர்; அது பொருள்மேல் நிற்றலின் தொழிலாகுபெயர். 'எல்லாம்'-நூல்மேல் நிற்றலின் பண்பாகுபெயர். 'கற்றது' ஒன்றன்பாற் படர்க்கை வினைமுற்றுப் பெயராதலின், 'எற்று'-என்னும் ஒன்றன்பாற் படர்க்கைக் குறிப்பு முற்றோடு முடிந்தது ; எ - பகுதி, ற் - சந்தி, று-விகுதி ; என் பகுதி யெனக் கொண்டு னகரம் நித்தியம் என ஓர் புதுவிதியைக்கொண் டுடாப் படுவாரும் உளர், கு-உருபு மயக்கம். 'என்று' - இடைச்சொலடியாகப் பிறந்த வினையெச்சம் ; என் - இடைச்சொற் பகுதி, ற் - இறந்தகால இடைநிலை, உ - விகுதி, இது பெயர் வினைகளின் பின் வந்து அவற்றின் பொருளையன்றி வேறு பொருளைத் தாராது நிற்பில் இடைச்சொல் எனக் கொள்க. 'கருத்து' - வினைமுதற் பொருளில் வந்த ஐ விகுதியொடு புணர்ந்து குன்றிய தொழிற்பெயர்; கருது என்னும் வினைப்பகுதி ஐ விகுதியொடு புணர்ந்து குன்றியபோது பகுதி யிரட்டித்தது. 'அகமகிழ்க,' 'கருத்தழிக'-

உயர்திணையொடு சார்ந்த அஃறிணை யுயர்திணை முடிபேற்றன, திணைவழுவமைதி. 'உணர்ந்த' - இசையெச்சம்.

---

கரு. கல்வி யுடைமை பொருளுடைமை யென்றிரண்டு
செல்வமுஞ் செல்வ மெனப்படும்—இல்லார்
குறையிரந்து தம்முன்னர் நிற்பபோற் றாமுந்
தலைவணங்கித் தாழப் பெறின்.

(ப-ரை) இல்லார் - (இருவகைச் செல்வங்களில் ஒன்றேனும்) இல்லாதவர், குறை இரந்து-குறைகளைச் சொல்லி யிரந்து, தம் முன்னர் - தம் முன்னே, நிற்பபோல்-தாழ்ந்து நிற்றல்போல, தாம் உம் - (அச் செல்வங்களையுடைய) தாமும், தலை வணங்கி - தலையால் வணங்கி, தாழ பெறின் - (பிறரைப்) பணிந்து நடப்பாராயின், (அவரடைந்த) கல்வி உடைமை - கல்விச்செல்வம், பொருள் உடைமை - பொருட்செல்வம், என்ற - என்று சொல்லப்பட்ட, இரண்டு செல்வம் உம் - இரண்டு செல்வங்களையும், செல்வம் எனப்படும் - செல்வங்களென்று (உயர்ந்தோரால்) சொல்லப் படும், எ-று.

(வி-ரை) இருவகைச் செல்வங்களி லொன்றேனும் உடையோர் அச்செல்வக் களிப்பால் தம்மை மறந்து நடப்பில் பழிபாவங் களிற் புகுத்தும் ஆதலிற் பணிந்து நடக்கவேண்டும் என்பார் 'தலை வணங்கித் தாழப்பெறின்' எனவும், பணிந்து நடப்போர் செல்வம் இம்மையிற் புகழும் மறுமையிற் சுவர்க்காதி யின்பமுந் தருதலில் 'செல்வ மெனப்படும்' எனவுங் கூறினர். 'என்ற'-இடைச்சொல் லடியாகப் பிறந்த பெயரெச்சம் ஈறு தொக்கு நின்றது; 'என்று' எனக் கொள்ளில் என்று என்னும் எண்ணிடைச்சொல் ஓரிடத்தி னின்று பிரிந்து பொருடோறும் பொருந்தி யிறுதியில் தொகையும் முற்றுமையும் பெற்று நடந்தது எனக் கொள்க. [நன்னூல் - இ-கக-ரு]. 'எனப்படும்'-இடைச்சொல்லடியாகப் பிறந்த செய்யும் என்னும் வாய்பாட்டு வினைமுற்று; என் - பகுதி அ-சாரியை, ப்-

சந்தி, பகு - செயப்படுபொரு ளுணர்த்தும் விகுதி, அணைத்தும் ஓர் பகுதி, உக்ரக்கேடு சந்தி, உம் - விகுதி ; இச் செயப்பாட்டுவினை 'உண்' என்னும் விகுதியைப் பெற்றுக் கட்டுண்டான் என வருதல் காண்க. 'நிற்ப' - தொழிற்பெயர் ; நில் - பகுதி, ல் ற் ஆகத் திரி தல் சந்தி, ப - விகுதி. 'முன்னர்'-இட வேறுபாட்டை யுணர்த்தி நிற்றல் இடைச்சொல்லடியாகப் பிறந்த பெயர்ச்சொல் ; முன் - பகுதி, ன் - சந்தி. அர் - பகுதிப்பொருள் விகுதி ; இது பரிமே லழகர் உரையிற் கண்டது ; இவ்வாறன்றிப் பண்புப்பெயராகக் கொண்டு, 'நர்' விகுதியாகப் பிரித்து இடர்ப்படுவோரும் உளர்.

---

கசு. ஆக்கம் பெரியார் சிறியா ரிடைப்பட்ட
மீச்செலவு காணி னனிதாழ்ப—தூக்கின்
மேலியது மேன்மே லெழச்செல்லச் செல்ல
வலிதன்றே தாழுந் துலைக்கு.

(ப-ரை) ஆக்கம் பெரியார் - பெரிய செல்வமுடையோர், சிறியார் இடை - சிறிய செல்வமுடையாரிடத்து, பட்ட - உண் டாகிய, மீ செலவு - வரம்பிகந்த நடையை, காணின் - கண்டால், நனி தாழ்ப - மிகவுந் தாழ்வார்; தூக்கின் - ஆராயின், துலை கு - துலாக்கோலில், மெலியது - நொய்ய பொருளுள்ள தட்டு, மேல் மேல் - மிகவும், எழ செல்ல செல்ல - உயரச் செல்லுந்தோறும், வலிது அன்று ஏ-திண்ணிய பொருளுள்ள தட்டல்லவா, தாழும்- தாழாநிற்கும்,? எ-று.

(வி-ரை) தாழ்தல் - பணிந்து நடத்தல். தூக்கல் - நிறுத்திப் பார்த்தல். 'ஆக்கம்' என்றது இருவகைச் செல்வத்தையும். இரு வகைச் செல்வங்களு ளொன்றேனுங் குறைவறப் பெற்றோர் அவ ற்றா லாய பயன் முற்றும் அறிந்தவ ராதலின், பணிந்து நட த்தல் அவர்க் கியப்பு என்பார் 'பெரியார் தாழ்ப' எனவும், அவற் றிற் சிறியோர் அவற்றா லாய பயன் முற்றும் அறியாராதலின், வரம்பிகந்து நடத்தல் அவர்க் கியல்பென்பார் 'பட்ட மீச்செலவு'

எனவுங் கூறினார். 'ஆக்கம் பெரியார்' உயர்திணையொடு சேர்ந்த அஃறிணை யுயர்திணை முடிபேற்றது, திணைவழுவமைதி. 'சிறியார்' என்பதையும் ஆக்கத்தோடு கூட்டி யவ்வாறு கொள்க. 'ஆக்கம்'- ஆகுதல்; அது பொருள்மேல் நிற்றலில் தொழிலாகுபெயர்; ஆகு- பகுதி, க் - விரித்தல் விகாரம், உகரக்கேடு சந்தி, அம் - விகுதி, ஆ பகுதியாகக் கொள்ளில், க்-சந்தி, கு - சாரியையாகக் கொள்க. 'மெலியது,' 'வலியது' இரண்டும் மென்மை, வன்மை என்னும் பண்படியாகப் பிறந்த குறிப்புவினைமுற்றுப் பெயர்கள். 'மேல்மேல்', 'செல்லச்செல்ல' - முன்னது மேன்மை என்னும் பண்படியாக வந்த அடுக்காதலின் மிகுதிப் பொருளையும், பின்னது வினையெச்ச அடுக்காதலின் தொழிற் பன்மையு முணர்த்திப் பொருணிலை யடுக்காயின. கு-உருபு மயக்கம். ஏ-வினைப்பொருட்டு. 'நனி தாழ்ப' உரிச்சொற்றொடராதலின் வருமொழி முதல் வல்லெழுத் தியல்பாயிற்று, [நன்னூல் - மெ - கூரு - சூத்திரம்].

---

கஎ. விலக்கிய வோம்பி விதித்தனவே செய்யும்
நலத்தகையார் நல்வினையுந் தீதே—புலப்பகையை
வென்றனம் நல்லொழுக்கி னின்றேம் பிறவென்று
தம்பாடு தம்மிற் கொளின்.

(ப-ரை) நலம் தகையார்-நற்குணமுடையார், புலம் பகை ஐ- இந்திரியமாகிய பகையை, வென்றனம் - வென்றோம்; நல் ஒழுக்கு இல் - நல்லொழுக்க வழியில், நின்றேம் என்று - (நாம்) நின்றோ மென்று, தம் பாடு - தமது பெருமையை, தம் இல் கொளின் - தம்முள் மதித்து நடப்பாராயின், விலக்கிய - (நூல்) விலக்கின வற்றை, ஓம்பி - விலக்கி, விதித்தன ஏ - விதித்தனவற்றையே, செய்யும் - செய்கின்ற, நல்வினை உம் - (அவர்கள்) நல்ல கருமமும், தீது - கொடியது, எ-று.

(வி-ரை) ஓம்பல் - வராமற் பாதுகாத்தல். புலப்பகையை வெல்லுதலாவது - தீய வொழுக்கங்களில் இந்திரியங்களைப் புகுத்

தாது விலக்கல். மனத்திற் குற்ற மில்லாது நடத்தலே அறமாத லில், 'தம்பாடு தம்மிற் கொளின் நல்வினையுந் தீது' என்றார்.

[திருக்குறள்-பாயிரம்-சு-ம் அதி.-அறன்வலியுறுத்தல்-சு]

"மனத்துக்கண் மாசில னாத லனைத்தறன்"

என்றார் பிறரும். 'விலக்கிய,' 'விதித்தன' இரண்டும் இறந்த கால வினைமுற்றுப் பெயர்கள். 'ஓம்பி' - இறந்தகால வினையெச்சம். 'கொளின்' என்னும் தெரிநிலை எதிர்கால வினையெச்சம் 'தீது' என்னும் பண்படியாகப் பிறந்த ஒன்றன்பாற் படர்க்கைக் குறிப்பு வினைமுற்றுப் பயனிலை கொண்டது; தீமை - பகுதி, ஈறு கெடுதல் சந்தி, து - விகுதி. புலப்பகை' - இருபெயரொட்டுப் பண்புத்தொகை. 'ஏ' இரண்டனுள் முன்னது பிரிநிலை, பின்னது அசைநிலை. 'பிற' - அசைச்சொல். உம்மை உயர்வு சிறப்புப் பொருட்டு.

---

கஅ. தன்னை வியப்பிப்பான் றற்புகழ்த நீச்சுடர்
நன்னீர் சொரிந்து வளர்த்தற்றால்—தன்னை
வியவாமை யன்றே வியப்பாவ தின்பம்
நயவாமை யன்றே நலம்.

(ப-ரை) தன் ஐ வியப்பிப்பான் - தன்னை (பிறர்) நன்கு மதிக்கும்பொருட்டு, தன் புகழ்தல் - தன்னை (ஒருவன்) புகழ்தல், தீ சுடர் - விளக்கை, நல் நீர் - நல்ல நீரை, சொரிந்து - வார்த்து, வளர்த்தால் அற்று - விளக்கஞ்செய்தா லொக்கும்; இன்பம் - சிற்றின்பத்தை, நயவாமை அன்று ஏ - விரும்பாது நடத்த லல்லவோ, நலம் - அழியா இன்பம் ஆவது; (அதுபோல்), தன் ஐ வியவாமை அன்று ஏ - தன்னை நன்குமதியாது நடத்தலல்லவோ, வியப்பு ஆவது - நன்கு மதிப்பாவது, எ-று.

(வி-ரை) கல்வி செல்வங் குடிப்பிறப்புகளால் பிறர் நன்கு மதிக்கத் தன்னைப் புகழ்வோன் அப் புகழ் பெறாது பழி பெறு வான் என்பார் 'தீச்சுடர் நன்னீர் சொரிந்து வளர்த்தற்றால்' எனவும், மனமடங்கி நிற்போன் பெறுவது இன்பமேபோல, அவற்

ருல் அடங்கி நிற்போன் பெறுவது புகழே என்பார் 'தன்னை வியவாமை யன்றே வியப்பாவது' எனவுங் கூறினர்.

"கற்றனவுங் கண்ணகன்ற சாயலு மிற்பிறப்பும்
பக்கத்தார் பாராட்டப் பாடெய்தும்—தானுரைப்பின்
மைத்துனர் பல்கி மருந்திற் றணியாத
பித்தனென் றெள்ளப் படும்."

என்ருர் பிறரும். 'வியப்பிப்பான்' - பிறவினை எதிர்கால வினையெச்சம்; விய - பகுதி, ப் - சந்தி, பி - பிறவினை விகுதி, அனைத்தும் ஓர் பகுதி, ப் - சந்தி, பான் - விகுதி; முற்ருகக் கொள்ளில், ப் - இடைநிலை, ஆன் விகுதியாகக் கொள்க. 'வியவாமை' 'நயவாமை' - எதிர்மறைத் தொழிற்பெயர்; நய - பகுதி, வ் - சந்தி, ஆ-எதிர்மறை விகுதி, அனைத்தும் ஓர்பகுதி, மை - விகுதி. 'தீ சுடர்' -

"சோற்ருெறு மிற்றிதன் பெற்றி"

என்றதனல் வினை சார்பின மிடங்களை மேவி விளங்காத பலபொருளொருசொல்லாதலில் 'தீச்சுடர்' எனச் சிறப்பொடு கூட்டிக் கூறினர். [நன்னூல் - பொ - ௩௧ - ௫.] 'வளர்த்தற்று'- தகுதி வழக்குள் மங்கலம். 'வளர்த்தால்' - வினையெச்ச ஈறு தொகுத்தல்; வளர்த்தலை யொக்கும் எனப் பெயராகக் கொள்ளின் வளர்த்தது என்னும் இடைநிலை பெற்று வந்த தொழிற்பெயர்; ஈறு தொகுத்தலாகக் கொள்க. 'அற்று' - இடைச்சொல்லடியாகப் பிறந்த குறிப்பு வினைமுற்று; அன் பகுதி, து - விகுதி, ன் த் இரண்டும் றகரமாகத் திரிதல் சந்தி, பொருளாதி யடியாகப் பிறந்த குறிப்பு முற்ருகில் அ - பகுதி, று விகுதியாகக் கொள்க.

---

௧௬. பிறராற் பெருஞ்சுட்டு வேண்டுவோன் யாண்டும்
மறவாமே நோற்பதொன் றுண்டு—பிறர் பிறர்
சீரெல்லாந் தூற்றிச் சிறுமை புறங்காத்து
யார்யார்க்குந் தாழ்ச்சி சொலல்.

(ப-ரை) பிறர் ஆல் - அந்நியரால், பெரும் சுட்டு-ஏனகு மதிக் கப்படுதலை, வேண்டுவான் - விரும்புவோன், யாண்டு உம் - எப் போதும், மறவாமே-மறவாமல், நோற்பது - அனுட்டிப்பதாகிய, ஒன்று - ஒரு செய்கை, உண்டு - உளது; (அதாவது) பிறர் பிறர்- மற்றையோருடைய, சீர் எல்லாம்-குணங்களையெல்லாம், தூற்றி - பலரறியச் சொல்லி, சிறுமை - (அவர்களது) குற்றங்களை, புறம் காத்து - வெளிவிடாமல் அடக்கி, யார் யார் கு உம் - எவ்வகை யோர்க்கும், தாழ்ச்சி சொலல் - பணிவான சொற்களைச் சொல்லு தல், எ-று.

(வி-ரை) பிறர் குற்றங்களை மறைத்துக் குணங்களை மாத்தி ரம் எடுத்துக் கூறுதல் புகழ் பெறுதற்குச் சாதனம் என்பார் மற வாமே நோற்ப தொன்றுண்டு' என்றார். கல்வி செல்வம் குடிப் பிறப்புகளிற் சிறந்தோரும் ஏனையோரும் அடங்குதற்கு 'யார் யார்க்கும்' என்றார். 'சுட்டு' - 'குறித்தல்' என்னும் பொரு ளில் வந்த முதனிலைத் தொழிற்பெயர், பெருமை என்னும் பண் படை யடுத்துப் புகழ்மேல் நின்றது. 'மறவாமே' - எதிர்மறை வினையெச்சம்; மற - பகுதி, வ் - சந்தி, ஆ - எதிர்மறை விகுதி, அனைத்தும் ஓர் பகுதி, மே-விகுதி. 'நோற்பது' என்னும் எதிர் கால இடைநிலை பெற்று வந்த தொழிற்பெயர் 'ஒன்று' என்னும் பண்பாகுபெயரோடு முடிந்து இருபெயரொட்டுப் பண்புத் தொகைநிலைத்தொடராய் நின்றது; நோல் - பகுதி, ல் ற் ஆகத் திரிதல் சந்தி, ப் - எதிர்கால இடைநிலை, அ - சாரியை, து - விகுதி. 'உண்டு' - ஒன்றன்பாற் படர்க்கைக் குறிப்பு வினை முற்று; உண்மை - பகுதி, ஈறு கெடுதலும், ள் ண் ஆகத் திரித லும் சந்தி, டு - விகுதி. 'பிறர்பிறர்' - பன்மைப்பொருளில் வந்த அடுக்கு. 'சீரெல்லாம்' - ஒருமையிற் பன்மை வந்த வழுவமைதி. 'தூற்றி' - இறந்தகால வினையெச்சம்; தூற்று - பகுதி, உகரக் கேடு சந்தி, இ - விகுதி; தூறு என்னும் பகுதி இடையில் ஒற் றிரட்டித்துப் பிறவினைப் பகுதியாய் நின்றது. 'புறங்காத்து'- புறத்திற் காத்து என நிற்றலில் ஏழாம் வேற்றுமைத் தொகை

நிலைத்தொடர். தாழ்ச்சி' - சொல்மேல் நிற்றலில் தொழிலாகு பெயர். உம்மை இரண்டும் முற்றுகள்.

---

உ௦. கற்றுப் பிறர்க்குரைத்துத் தாநில்லார் வாய்ப்படூஉம்
வெற்றுரைக் குண்டோர் வலியுடைமை—சொற்றநீர்
நில்லாத தென்னென்று நாணுறைப்ப நேர்ந்தொருவன்
சொல்லாமே சூழ்ந்து சொலல்.

(ப-ரை) கற்று-(நூல்களைக்) கற்றுணர்ந்து, பிறர் கு உரைத்து-பிறர்க்குச் சொல்லி, தாம் நில்லார் - தாம் (அந் நெறியி லடங்கி) நில்லாதவராது, வாய் படும் - வாயினிடத்து உண்டாகிய, வெறுமை உரை கு - பயனில்லாத வார்த்தைக்கு, ஓர் வலி உடைமை உண்டு - ஒரு வல்லமை யுடைமை யுண்டு; (அது யாதெனில்) சொற்ற நீர் - (எனக்குக்) கற்பித்த நீர், நில்லாதது - (அந் நெறியில்) நில்லாதது, என் என்று - யாதென்று, நாண் உறைப்ப - வெட்கம் அதிகரிக்க, ஒருவன் நேர்ந்து - ஒருவன் எதிர்த்து, சொல்லாமே - சொல்லாமல், சூழ்ந்து சொலல் - ஆலோசித்துச் சொல்லுதல், எ-று.

(வி-ரை) நூல்களைக் கற்று அவற்றின் வழி நில்லார் கூறும் வார்த்தை பயனில் வார்த்தை யென்பார் 'வெற்றுரை' எனவும், பிறர்க்குப் போதிக்குமிடத்து அவற்றை வற்புறுத்திக் கூறுதொழிதல்வேண்டும் என்பார் 'சூழ்ந்து சொலல்' எனவும், இதுவன்றி வேறு வன்மை யின்மை என்பார், 'ஓர் வலியுடைமை யுண்டு' எனவும் புகழ்வதுபோலப் பழித்துக் கூறினர் ஆதலின், இது இலேசவணி.

[தண்டியலங்காரம்]

" குறிப்பு வெளிப்படுக்குஞ் சத்துவம் பிறிதின்
மறுத்துரை யாட லிலேச மாகும் "

'வாய்ப்படும்' என வாளா கூறியது வெற்றுரையின் இழிவு தோன்ற நின்றது. 'சொற்ற' - இறந்தகாலப் பெயரெச்சம்;

சொல் - பகுதி, த் - இடைநிலை, ல் த் இரண்டும் ற் ஆகத் திரிதல் சந்தி, அ - விகுதி, இது செய்பவனோடு முடிந்தது. 'உறைப்ப செய என்னும் வாய் பாட்டு வினையெச்சம்; உறை - பகுதி, ப் சந்தி, ப் - விரித்தல் விகாரம், அ - விகுதி, இது எதிர்காலத்தைக் காட்டியது. 'சூழ்ந்து' - இறந்தகால வினையெச்சம்; சூழ் பகுதி, ந் - சந்தி - த் இடைநிலை, உ - விகுதி; இது 'சொலல் என்னும் தொழிற்பெயரோடு முடிந்தது. 'வாய்ப்படூஉம்' இன்னிசை நிறைத்தற்கண் வந்த அளபெடை.

---

௨௧. பிறர்க்குப் பயன்படத் தாங்கற்ற விற்பார்
தமக்குப் பயன்வே றுடையார்—திறப்படூஉம்
தீவினை யஞ்சா விறல்கொண்டு தென்புலத்தார்
கோவினை வேலை கொளல்.

(ப-ரை) தாம் கற்ற - தாம் கற்ற அறிவு நூற் பொருளை, பிறர் கு பயன்பட-(தாம் பய னடையாது) பிறர்க்கு பய னுண் டாக, விற்பார் - (பொருளுக்கு) விற்பவர், தமக்கு பயன் வேறு - (அதனால்) தமக்கு வேறு பயன், உடையார் - உடையராவர்; (அது யாதெனில்), திறப்படும் - பல வகைப்பட்ட, தீவினை - தீய செயல்களுக்கு, அஞ்சா - அஞ்சாத, விறல் கொண்டு - வன்மையைக் கொண்டு, தென்புலத்தார் - பிதிரர்களுக்கு, கோ இன் ஐ - அரசனாகிய யமனிடத்து, வேலை கொளல் - (தமக்கு) வேலை கொள்ளுதல், எ-று.

(வி-ரை) 'திறம்' - கூறுபாடு. 'தென்புலத்தார்' - தென்றிசையி லுள்ளவர். பக்குவர்க்கன்றி யபக்குவர்க்குப் பொருளின் பொருட்டு அறிவுநூற் பொருளைப் போதித்தல் தீய செயல் என்பார் 'தீவினையஞ்சா விறல் கொண்டு' எனவும், அத் தீயசெயல் பழிபாவங்களைப் பெருக்கி நரகத்திற் புகுத்தும் என்பார் 'தென் புலத்தார் கோவினை வேலை கொளல்' எனவுங் கூறினார். 'கற்ற, 'விற்பார்' இரண்டும் வினைமுற்றுப் பெயர்கள். வில் - பகுதி, ல் ற் ஆகத் திரிதல் சந்தி, ப் - இடைநிலை, ஆர் - விகுதி. 'அஞ்சா'

ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். 'உடையார்'-செயப்படுபொருள் குன்றாத குறிப்பு வினைமுற்று. 'ஐ'-உருபு மயக்கம். 'வேலைகொளல்' - அடையப்படுபொருளில் வந்த இரண்டாம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். 'தென்புலத்தார்'-தெற்கு என்பதன் ஈற்றுயிர் மெய் கெட்டு, றகரம் னகரமாகத் திரிந்தது. [நன்னூல் - உயி - ௩௬-சூத்திரம்].

---

௨௨. கற்பன வூழற்றார் கல்விக் கழகத்தாங்
கோற்கமின் றூத்தைவா யங்காத்தல்—மற்றுத்தம்
வல்லுரு வஞ்சன்மி னென்பவே மாபறவை
புல்லுரு வஞ்சுவ போல்.

(ப-ரை) கற்பன - கற்கும், ஊழ் அற்றார் - நல்வினை யில்லாதவர், கல்வி கழகத்து - கற்றோர் சபையில், ஒற்கம் இன்று - நாவடக்க மில்லாமல், ஊத்தை வாய்-அசுத்தமாகிய வாயை, அங்காத்தல் - திறத்தல், (எத்தன்மைத்தெனில்), மா - மிருகங்களும், பறவை - பறவைகளும், புல் உரு-புல்லினாற் செய்த உருவத்தைக் (கண்டு), அஞ்சுவ போல் - பயப்படுதல்போல, தம் வல் உரு - தமது பெரிய வுருவத்தைக் (கண்டு), அஞ்சன்மின் - அஞ்சாதிருங்கள், என்ப - என்று சொல்லுதலை யொக்கும், எ-று.

(வி-ரை) கல்வியா லன்றி நீரால் வாய் புனிதப்படாது என்பார் கல்லார் வாயை 'ஊத்தைவாய்' எனவும், அவர்கள் கற்றோர் சபையில் வாயைத் திறக்கில் தோற்றத்தா லுள்ள மதிப்புக் கெட்டு அவமதிப் படைவார் என்பார் 'மா பறவை யஞ்சுவபோல் அஞ்சன்மின்' எனவுங் கூறினர். 'கற்பன' - வினைமுற்றுப் பெயரெச்ச மாயிற்று. 'ஊழ் அற்றார்' - உயர்திணையோடு சார்ந்த அஃறிணை உயர்திணை முடிபேற்றது திணைவழுவமைதி. 'கல்வி' - 'கற்றல்' என்னும் பொருளில் வந்த தொழிற்பெயர்; அது உடையார்மேல் நிற்றலில் தொழிலாகுபெயர். 'ஒற்கம்', 'அங்காத்தல்' 'என்ப' - தொழிற்பெயர்கள். ஒல்கு - பகுதி, உகரக்கேடும், ல் ற்

ஆகத் திரிதலும் சந்தி, அம் - விகுதி. 'என்' - இடைச்சொல் வடியாகப் பிறந்த வினைப்பகுதி, ப - விகுதி. 'பறவை' - வினை முதற்பொருளில் வந்த தொழிற்பெயர்; பற - பகுதி, வ் - சந்தி, ஐ - விகுதி. 'மா' என்னும் பலபொரு ளொருசொல் இனத் தாற் பொதுமை நீங்கி மிருகத்தின்மேல் நின்றது. [நன்னூல் - பொ - ௩௬ - சூத்திரம்] வன்மை பெருமைமேல் நின்றது.

---

௨௩. போக்கறு கல்வி புலமிக்கார் பாலன்றி
மீக்கோ ணகையினர் வாய்ச்சேரா—தாக்கணக்கும்
ஆணவாம் பெண்மை யுடைத்தெனினும் பெண்ணலம்
பேடு கோளப்படுவே தில்.

(ப-ரை) போக்கு அறு - ஒழிதல் இல்லாத, கல்வி - கல்வியா லாய இன்பம், புலம் மிக்கார் பால் - அறிவிற் பெரியோ ரிடத்து, அன்றி - அல்லாமல், மீக்கொள் நகையினர் வாய் - நகை செய்தலை மேற்கொண்டா ரிடத்து, சேரா - சேராவாம்; பேடு - அலி, தாக்கணங்கு உம் - இலட்சுமியும், ஆண் அவாம் - ஆண் தன் மையை விரும்பும், பெண்மை உடைத்து எனின் உம் - பெண் தன்மை யுடையதாயினும், பெண் நலம் - பெண்ணின்பம், கொளப் படுவது இல் - (அவ அலியால்) அனுபவிக்கப்படுத லில்லை, எ-று.

(வி-ரை) மற்றை யின்பந் தோன்றி யழிதல்போலக் கல்வியா லாய இன்பந் தோன்றி யழியா தென்பார் 'போக்கறு கல்வி' எனவும், அவ்வின்பங் கற்றோரிடத்துப் பயன்படும் அன்றி மற்றை யோரிடத்துப் பயன் படாது என்பார் 'பெண்ணலம் பேடு கொளப் படுவதில்' எனவுங் கூறினர். 'மீ' - மேல். 'போக்கு' - முதனிலைத் தொழிற்பெயர்; போ - பகுதி, க்-விரித்தல் விகாரம், கு-விகுதி; அன்றிப் பிறவினை முதனிலைத் தொழிற்பெயர் தன்வினைப் பொருளில் வந்த தெனினு மமையும்; பிறவினையாங்கால் இடை யில் ஒற்றிரட்டித்ததாகக் கொள்க. வினைப்பகுதிகள்: வி, பி, கு, சு, டு, து, பு, று - விகுதிகளுள் ஒன்றேற்றும், அடங்கு என்னும மென்றொடர்க் குற்றியலுகர ஈற்று வினைப்பகுதி அடக்கு என

விகாரப்பட்டும், போகு: உருகு என்னும் நெடிற்றொடர் உயிர்த் தொடர்க் குற்றியலுகர வினைப்பகுதிகள் போக்கு: உருக்கு என இடையி லொற்றிரட்டித்தும், பிறவினைப் பகுதியாகி விகுதி முத லிய வுறுப்பு ஏற்றுப் பிறவினையாதலும், கரைந்தான் என்னுந் தன் வினையின் இடைநின்ற மெல்லொற்று வல்லொற்றாய்ப் பிறவினை யாதலும் உண்டு. 'அவாம்' - அவாவும் என்னும் பெயரெச்சத் தின் ஈறு கெட்டது,[நன்னூல்-வி-௨௨-சூத்திரம்.] 'கொளப்படுவது' என்னும் செயப்பாட்டு வினைத்தொழிற்பெயரில் தர் தொழிலாகிய 'கொள்' என்னும் முதனிலைக்குப் 'பேடு' என்னும் மூன்றாம் வேற்றுமை வினைமுதலும், 'படுவது' என்னும் தம்மினாகிய தொழிற்குச் செயப்படுபொருளில் வந்த 'பெண்ணலம்' வினை முதலும் ஆகக் கொள்க. உம்மை இரண்டனுள் முன்னது இறந் தது தழீஇய வுயர்வுசிறப்புப்பொருட்டு; பின்னது எதிர்மறைப் பொருட்டு.

---

௨௪. கற்றன கல்லார் செவிமாட்டிக் கையுறூஉங்
குற்றந் தமதே பிறிதன்று—முற்றுணர்ந்துந்
தாமவர் தன்மை யுணராதார் தம்முணரா
ஏதிலரை நோவ தெவன்.

(ப-ரை) கற்றன - (தாம்) கற்ற நூற்பொருள்களை, கல் லார் - அறிவில்லாரது, செவி மாட்டி - காதிற் புகுத்தி, கையுறும் - (அவரால்) அவமதிக்கப்படும், குற்றம் - குற்றம், தமது ஏ - தம் முடையதே (அல்லாமல்), பிறிது அன்று - அவருடையதல்ல; (ஆதலில்) தாம் முற்று உணர்ந்து உம் - தாம் எல்லாவற்றையு மறிந்தும், அவர் தன்மை - அக் கல்லார் தன்மையை, உணராதார் - அறியாதார், தம் உணரா - தமது தன்மையை யறியாத, ஏதிலர் ஐ - அந்நியரை, நோவது, - வெறுத்தல், எவன் - யாது பயன்?, எ-று.

(வி-ரை) தாம் கற்ற நூற்பொருள்களைத் தமது தன்மையை யறியும் அறிவில்லார்க்குக் கற்பித்தல் குற்றம் என்பார் பிறிதிலைப்

பொருளில் வந்த 'எ' தந்து 'குற்றம் தமதே பிறிதன்று' எனவும், முழுதும் அறிந்த தாம் அவரது தன்மையை யறியாமையால் வரும் அவமதிப்புத் தமது குற்றத்தால் வந்ததெனக் கருதி யடங்கல் வேண்டும் என்பார் 'எதிலரை நோவ தெவன்' எனவுங் கூறினார். 'மாட்டி - இறந்தகால வினையெச்சம்; மாட்டு - பகுதி, உகரக்கேடு சந்தி, இ - விகுதி; இவ் வினைப்பகுதி விகுதி யுறுப் பிடைச்சொல்லாக வருதலு முண்டு; "சொல்லமாட்டுவான்," "சொல்லமாட்டான்" என உடன்பாட்டிலும் எதிர்மறையிலும் வருதல் காண்க; இவ் வினையெச்சம் 'கையுறும்' செயப்பாட்டு வினைப்பெயரெச்சத்தின் படு விகுதியொடு முடிந்தது. 'கல்லார்' என உயர்திணைப்பொருளாகக் கூறிப் பின்னர் 'பிறிது' என அஃறிணைப் பொருளாகக் கூறியது செறலின்கண் வந்த திணைவழுவமைதி; [நன்னூல்-பொ-உஅ-சூத்திரம்]. 'பிறிது' - பிற பகுதி, அ-கேடு சந்தி, இ - சாரியை, து - விகுதி; இது பலவின்பாலில் வரில், ஈற்றகரங் கெட்டு, அ என்னும் பலவின்பால் விகுதி யேற்றுப் பிற என வரும். 'குற்றம்'-பண்புப்பெயர்; குறுமை-பகுதி, ஈறு கெடுதலும், தன்னொற் றிரட்டலும், உகரக்கேடும் சந்தி, அம் - விகுதி. 'நோவது' - இடைநிலை பெற்று வந்த தொழிற்பெயர்; நொ-பகுதி, நோ நீட்டல் விகாரம், வ் - எதிர்கால இடைநிலை, அ-சாரியை, து - விகுதி.

---

உரு. வேத்தவை காவார் மிகன்மக்கள் வேறுசிலர்
காத்தது கொண்டாங் குவப்பெய்தார்—மாத்தகைய
அந்தப் புரத்தது பூசை புறங்கடைய
கந்துகோல் பூட்கைக் களிறு.

(ப-ரை) பூசை - பூனையானது, மா தகைய - பெருந்தன்மையையுடைய, அந்தப்புரத்தது-அந்தப்புரத்திலுள்ளது, (ஆயினுஞ் சிறப்படைதலில்லை) ; கந்து - கட்டுத்தறியை, கொல் - முறிக்கும், பூட்கை-துதிக்கையையுடைய, களிறு-யானை, புறங்கடைய-தலைவாயிலினிடத்திலுள்ளன (ஆயினுஞ் சிறப்படையும்); (அதுபோல),

மிகல் மக்கள்-அறிவுடையோர், வேந்து அவை - அரச சபையை, காவார் - காத்திரார்; (ஆயினும் மகிழ்வுடைவர்); (வேறு சிலர்) அவமொழிந்த சிலர், காத்ததுகொண்டு-(அரச சபையைக்) காத்திருத்தலால், உவப்பு எய்தார் - மகிழ்வுடையார், எ-று.

(வி-ரை) 'அந்தப்புரம்' - உள்ளறை. "அந்தர்" என்னும் வடமொழித் திரிபு ஆதலால் தற்பவம். 'பூட்கை' - துவாரமுடைய கை; இது அன்மொழித்தொகையாய் யானைக்குப் பரியாயமாய் வருதல் காண்க. கற்றறிவுடையார் அரச சபையைக் காவாதிருப்பினும் அவரா லுபசரிக்கப்படுவோர் என்பதையும், அவ்வறிவில்லார் காத்திருப்பினும் உபசரிக்கப்படார் என்பதையும் உவமை முகத்தால் விளக்கினர். வேந்து - சாதிப்பண்பு; அது உடையார்மேல் நிற்றலில் பண்பாகுபெயர்; 'வேத்து' என நின்றது வலித்தல் விகாரம். 'மக்கள்'; மக - பகுதி, அ - தொகுத்தல், கள்-விகுதி; இவ் விகுதி பகுதிப்பொருள் விகுதியில் வருதலின் பலர்பாலிலும் பலவின்பாலிலும் வரும்; தன்மை முன்னிலைகளில் வரில் இடவழுவமைதியாகக் கொள்க. 'காத்தது'- இறந்தகால இடைநிலை பெற்றுவந்த தொழிற் பெயர்; கா-பகுதி, த்-சந்தி, த் - இடைநிலை, அ - சாரியை, து-விகுதி. 'கொண்டு'- கருவிப்பொருளில் வந்த மூன்றும் வேற்றுமைச் சொல்லுருபு; 'உவப்பு' - தொழிற்பெயர்; உவ - பகுதி, ப் - சந்தி, பு - விகுதி. 'தகைய' - பண்படியாகப் பிறந்த குறிப்புவினைப் பெயரெச்சம். தகை - பகுதி, ய் - சந்தி, அ - விகுதி. 'புறங்கடைய'-இடத்தினடியாகப் பிறந்த அஃறிணைப் பலவின்பாற் படர்க்கைக் குறிப்பு வினைமுற்று; புறங்கடை - பகுதி, ய் -சந்தி, அ - விகுதி 'ஆங்கு'- அசைநிலை. 'கல்லார்'-'அறிவில்லார்' எனக் காரியத்தைக் காரணமாக உபசரிக்கப்பட்டது.

---

உசு. குலமகட்குத் தெய்வங் கொழுநனே மன்ற
புதல்வர்க்குத் தந்தையுந் தாயும்—அறவோர்க்
கடிகளே தெய்வ மனைவோர்க்குந் தெய்வம்
இலைமுகப் பைம்பூ ணிறை.

(ப-ரை) குலமகள் கு - கற்புடைய பெண்ணுக்கு, கொழுநன் ஏ - கணவனே, தெய்வம் தெய்வமாம்; மன்ற - நிச்சயமாக, புதல்வர் கு - புத்திரருக்கு, தந்தை உம் தாய் உம் - தகப்பனும் தாயுமே, தெய்வம் - தெய்வமாம்; அறவோர்க்கு - (பிரமசரிய முதலிய) அறத்தின் வழி நிற்போர்க்கு, அடிகள் ஏ - ஆசிரியரே, தெய்வம் - தெய்வமாம்; அனைவோர் கு உம்-(குலமகள்முதலிய) யாவருக்கும், இலை முகம் - இலை வடிவமாகச் (செய்த), பைம் பூண் - பசிய ஆபரணத்தை யணிந்த, இறை - அரசனே, தெய்வம் - தெய்வமாம், எ-று.

(வி-ரை) 'இலைமுகப்பூண்'-வெற்றிலைச் சரப்பணி. 'மன்ற' என்பதனை யேனையிடத்துங் கூட்டிப் பொருள் கொள்க. பெண்களைக் கற்பின்வழி நிறுத்தலும், புதல்வரைத் தந்தைதாயர் வழி நிறுத்தலும், பிரமசரியமுதலிய நிலையில் நிற்போரை யந்நிலையில் வழுவாது நிறுத்தலும் அரசன் செயலாதலில் 'இறை அனைவோர்க்குந் தெய்வம்' என்றார். 'குலமகட்குத் தெய்வங் கொழுநனே' என்றமையால் 'அறவோர்' என்றது அவரொழிந்த ஏனையோர்: பிரமசாரி, வானப்பிரத்தன், சந்நியாசி. பிரமசாரி-விவாகமில்லாமல் ஆசிரியனிடத்தோதி விரதங் காப்போன்; வானப்பிரத்தன் - இல்லந் துறந்து மனையாளோடாயினும் தனித்தாயினும் வனத்தில் தவஞ் செய்வோன்; சந்நியாசி-முற்றத் துறந்தோன். குவ்வுருபு நான்குந் தகுதிப்பொருளன. 'மன்ற'-தேற்றப்பொருளில் வந்த இடைச்சொல்; அது இடையில் நின்று ஏனை யிடங்கட்குப் பிரிந்து செல்லுதலிற் பிரிநிலை; அன்றி இடைநிலைத்தீவக அணி எனினும் அமையும்.

[தோல்காப்பியம்-சொ-இ-௧௭-சூத்திரம்]

"மன்றவென் கிளவி தேற்றஞ் செய்யும்."

'அடிகள்' ஒருமையிற் பன்மை வந்தது; அடி - முதல்; அது உடையான்மேல் நிற்றலில் பண்பாகுபெயர். 'இறை' - தங்கிநிற்றல்; அது உடையான்மேல் நிற்றலில் தொழிலாகுபெயர்; இறு - பகுதி, உகரக்கேடு சந்தி, ஐ - விகுதி. 'தந்தை' - முறைப்

பெயர், தாம் - பகுதி, முதல் குறுகல் விகாரம், ம் ந் ஆகத் திரிதல் சந்தி, த் - பெயரிடைநிலை, ஐ - விகுதி, தை - முறைப்பொருள் விகுதி யெனக் கொள்ளினும் அமையும். 'கொழுநன்' - 'வளஞ் செய்வோன்' என நிற்றலில் காரணப்பெயர்; கொழுமை - பகுதி, ஈறு கெடுதல் சந்தி, ந்-பெயரிடைநிலை, அன்-விகுதி; கொழுமை-வளமை. 'தெய்வம்' - ஆரியச் சிதைவு; தற்பவம். 'தந்தையும் தாயும் தெய்வம்' என ஒருமை முடிபேற்றது வழுவன்றோ எனில்,—பால்பகா உயர்திணைப்பெயர் ஆதலின் வழுவன் றென்க.

---

உஎ. கண்ணிற் சொலிச்செவியி னோக்கு மிறைமாட்சி
புண்ணியத்தின் பாலதே யாயினும்—தண்ணளியால்
மன்பதை யோம்பாதார்க் கென்னும் வயப்படைமற்
றென்பயக்கு மாணல் லவர்க்கு.

(ப-ரை) வயம் படை - வெற்றியைத் தரும் ஆயுதம், ஆண் அல்லவர் கு - ஆண்தன்மையுடைய நல்லார்க்கு, என் பயக்கும் - யாது பயன் கொடுக்கும்? (அதுபோல) கண் இல் சொல்லி-கண்க ளாற் சொல்லி, செவி இல் நோக்கும் - காதுகளாற் பார்க்கும், இறை மாட்சி - (தாம் பெற்ற) அரசச் செல்வம், புண்ணியத்து இன் பாலது ஆயின் உம் - நல்வினையினது பகுதியதானாலும், தண் அளி ஆல் - குளிர்ந்த கிருபையால், மன்பதை - மக்கட் பரப்பை, ஓம்பாதார் கு - பாதுகாவாதார்க்கு, என் ஆம் - யாது பயன்படும்?, எ-று.

(வி-ரை) தமது பரிசனங்களை யரிய தொழிலிற் புகுத்தப் பார்வையாற் குறிப்பித்தல் வாயாற் சொல்லுதலோடு ஒக்குமென் பார் 'கண்ணிற்சொலி' எனவும், தமது நாட்டில் நடப்பனவற்றை ஒற்றால் கேட்டறிதல் கண்ணாற் பார்த்தலோடு ஒக்கும் என்பார் 'செவியி னோக்கும்' எனவும், யாவுந் தன்னடிப்படுத்த நடத்தும் அரசச்செல்வம் முற்பிறப்பிற் செய்த அறப்பயன் என்பார் 'புண்ணியத்தின் பாலது' எனவும், அப் பயனைச் செல்வக் களிப் பால் மறக்கின் அச் செல்வம் பயன்படாது என்பார் 'என்னும்'

எனவுங் கூறினர். 'மாட்சி' பெருமை; அது தருதற்குக் காரண மாகிய செல்வத்தின்மேல் நிற்றலிற் காரியவாகுபெயர். 'படை' - கருவிப்பொருளில் வந்த தொழிற்பெயர்; படு - வினைப்பகுதி, உகரக்கேடு சந்தி, ஐ - விகுதி. படுத்தல் - கொல்லுதல். 'இன்' உருபு இரண்டும் கருவிப்பொருளில் வருதலின் உருபு மயக்கம்.

---

உஅ. குடிகொன் றிறைகொள்ளுங் கோமகற்குக் கற்று
மடிகொன்று பால்கொளலு மாண்பே—குடியோம்பிக்
கொள்ளுமா கோள்வோர்க்குக் காண்டுமே மாநிதியம்
வெள்ளத்தின் மேலும் பல.

(ப-ரை) குடி கொன்று - குடிகளை வருத்தி, இறை கொள்ளும் - வரிப்பணம் வாங்கும், கோமகன் கு - அரசனுக்கு, கன்று ஆ - கன்றினையுடைய பசுவினது, (கறவைப்பசு என்றபடி), மடி கொன்று - மடியை யறுத்து, பால் கொளல் உம் - பாலைக் கொள்ளுதலும், மாண்பு - தக்கது; குடி ஓம்பி - குடிகளைப் பாது காத்து, கொள்ளும் ஆறு - (வரிப் பணம்) வாங்கும் வகையில், கொள்வோர் கு - வாங்குவோர்க்கு, மா நிதியம் - பெரிய திரவி யம், வெள்ளத்தின் மேலும் - வெள்ளம் என்னுந் தொகைக்கு மேலும், பல - பலவாக, காண்டும் - காண்போம், எ-று.

(வி-ரை) குடியோம்பிக் கொள்ளும் வகையிற் கொள்ளுத லாவது - குடிகள் தளர்ந்தவிடத்து இன்சொற் சொல்லுதல், கொடுத்தல்முதலிய செய்து அவ்வவர் தகுதிக் கேற்பப் பின் இறைப்பணங் கொள்ளுதல்; அவ்வாறன்றி வருத்தி யிறைப்பணங் கொள்ளு மரசன் கொடுங்கோலன் என்பார் 'கோமற்குக் கற்று மடிகொன்று பால்கொளலு மாண்பே' எனவும், அவ்வாறு கொள் ளும் அரசன் குடிதழீஇக் கோலோச்சுஞ் செங்கோலன் என்பார் 'வெள்ளத்தின் மேலும் பல மாநிதியம் காண்டும்' எனவுங் கூறினர்.

௩௦. முடிப்ப முடித்துப்பின் பூசுவ பூசி
உடுப்ப வுடுத்துண்ப வுண்ணா—இடித்திடித்துக்
கட்டுரை கூறிற் செவிகொளா கண்விழியா
நெட்டுயிர்ப்போ டுற்ற பிணம்.

(ப-ரை) முடிப்ப முடித்து - முடிக்கு மலர்களை முடித்து, பின் - பின்பு, பூசுவ பூசி - பூசுங் கலவைகளைப் பூசி, உடுப்ப உடுத்து - உடுக்கும் உடைகளை யுடுத்து, உண்ப உண்ணா - உண்ணும் உணவுகளை யுண்டு (உயிர்த்தன்மை காட்டி), இடித்து இடித்து - (மந்திரிமுதலாயினோர்) பலதரம் நெருங்கி, கட்டுரை கூறில் - உறுதிமொழிகளைச் சொன்னால், செவி கொளா - காதிற் கொள்ளாது, கண் விழியா - கண்களைத் திறவாத அரசர்கள், நெட்டுயிர்ப்பு ஓடு உற்ற - பெருமூச்சோடு கூடிய, பிணம் - நடைப் பிணங்க ளாவார், எ-று.

(வி-ரை) தமக்கு வேண்டுவனமாத்திரம் கொண்டு பிறர்க்கு வேண்டுவனவற்றை நோக்காத அரசர்கள் பிணங்களோ டொப்பார் என்பது கருத்து.

'பூசுவ' என்றமையால் 'முடிப்ப' என்றதை மலர் என்றனம். 'முடிப்ப', 'பூசுவ', 'உடுப்ப', 'உண்ப' - இவை எதிர்கால வினை முற்றுப்பெயர்க ளாதலால் அவ்வவ் வினைகளுக்குரிய பொருள்களை விரித்தனம். 'முடிப்ப' : முடி - பகுதி, ப் - சந்தி, ப் - இடைநிலை, அ - விகுதி. 'பூசுவ': பூசு - பகுதி, வ் - இடைநிலை, அ - விகுதி. 'இடித்திடித்து' - வினையெச்ச அடுக்குப் பன்மைப் பொருள் மேல் நிற்றலில் பொருணிலையடுக்கு ; இடி - பகுதி, த் - சந்தி, த் - இறந்தகால இடைநிலை, உ - விகுதி. 'உண்ணா' - "செய்யா" என்னும் வாய்பாட் டிறந்தகால வினையெச்சம் 'கொள்ளா' என்னும் பலவின்பாற் படர்க்கை யெதிர்மறை வினை முற்றின் முதனிலையோடு முடிந்தது ; இவ் வினைமுற்று எச்சமாய் 'விழியா' என்னும் எதிர்மறை வினைமுற்றுப்பெயரின் முதனிலையோடு முடிந்தது. ஓரீற்றதாய் வந்த வினைகள்: எச்சமாயும், வினைமுற்றாயும், வினைமுற்றுப் பெயராயும் நின்றன. 'உண்ணா':

உண் - பகுதி, ண் - சந்தி, ஆ - இறந்தகால வினையெச்ச விகுதி. 'கொள்ளா': கொள் - பகுதி, ள் - சந்தி, ஆ - பலவின்பாற் படர்க்கை விகுதி. இழிபால் அஃறிணைப்பொருளாகக் கூறிய 'விழியா' என்னும் பன்மை எழுவாய் 'பிணம்' என்னும் பால் பகா அஃறிணைப் பயனிலையோடு முடிந்தது. 'உயிர்ப்பு'- தொழிற்பெயர்; உயிர் - பகுதி, ப் - சந்தி, பு - விகுதி.

---

௩௧. ஒற்றிற் றெரியா சிறைப்புறத் தோர்துமெனப்
பொற்றோ ளிணையாத் தெரிதந்துங்—குற்றம்
அறிவரிதென் றஞ்சுவதே செங்கோன்மை சென்று
முறையிடினுங் கேளாமை யன்று.

(ப-ரை) செங்கோன்மை - அரச நீதியாவது, ஒற்று இல் - வேவுகாரரால், தெரியா - (உண்மை) அறியப்படாத; (ஆதலால்) சிறைப் புறத்து - மறைவிடத்தில் (நின்று), ஓர்தும் என - (நாமே) அறிவோமென்று, பொன் தோள் துணை ஆ - (தமது) அழகிய தோளே துணையாகச் (சென்று), தெரிதந்து உம் - ஆராய்ந்தறிந் தும், குற்றம் - (நிகழ்ந்த) குற்றத்தை (முறையாக), அறிவு அரிது என்று - அறிதல் கூடாதென்று, அஞ்சுவது ஏ - அஞ்சுதலேயாம்; சென்று - (குடிகள்) போய், முறையிடின் உம் - (தமது குறை களைச் சொல்லி) முறையிட்டாலும், கேளாமை - செவி கொடா திருத்தல், அன்று - (அரசநீதி) அல்ல, எ-று.

(வி-ரை) குடிகள் சென்று முறையிடுதற்கு முன் குணங் குற் றங்களைத் தெரிந்து நடத்துதலே அரச நீதி யென்பதாம். குற் றம் ஆவன-கடன் கோடல், நிட்சேபம் முதலியவற்றால் நிகழ்வன. பரிசநம் இல்லாமல் தாமே போதலால் தமது தோளே துணை யென்பார் 'பொற்றோ ளிணையா' எனவும், குற்றங்களை யறிந்த விடத்துத் துன்பஞ் செய்தல், பொருட் கோடல், கொல்லுதல் என்னும் மூவகை யொறுப்பும் அரசன் செய்யவேண்டுதலின் தாம் தெரிந்ததை மந்திரி முதலியோர்க்குக் கூறி யாலோசித்துச் செய்ய வேண்டும் என்பார் பிரிநிலை 'ஏ' தந்து 'அறிவரிதென் றஞ்சுவதே'

எனவுங் கூறினர். 'ஒற்று' - பொருந்துதல் என்னு முதனிலைத் தொழிற்பெயர்; அத் தொழி லுடையான்மேல் நிற்றலில் முதனிலைத் தொழிலாகுபெயர். 'ஓர்தும்' - எதிர்காலத் தன்மைப் பன்மை வினைமுற்று; ஓர் - பகுதி, தும் - விகுதி; இறந்தகாலத்தில் வரில் ஓர்ந்தும் என வரும்; விகுதியே காலங் காட்டியது. 'குற்றம்' - சாதியொருமை. 'தெரிதந்து' - இறந்தகால வினையெச்சம்; தெரி என்னும் வினைப்பகுதி தா என்னும் வினைப்பகுதியோடு கூடி ஒருவினைப்பகுதித் தன்மைப்பட்டு நின்ற தெரிதா - வினைப்பகுதி, முதல் குறுகல் விகாரம், ந் - சந்தி, த் - இடைநிலை, உ - விகுதி, உம்மை உயர்வுசிறப்பு. 'செங்கோல்' - செவ்விய கோல்; அது உவமிக்கப்படு முறைமேல் நிற்றலில் உவமையாகு பெயர்.

---

௩௨. ஏதிலார் யாதும் புகல விறைமகன்
கோதோரீஇக் கொள்கை முதுக்குறைவு—நேர்நின்று
காக்கை வெளிதென்பா ரென்சொலார் தாய்க்கொலை
சால்புடைத் தென்பாரு முண்டு.

(ப-ரை) நேர் நின்று - எதிர் நின்று, காக்கை - காக்கையானது, வெளிது என்பார் - வெண்ணிற முடையதென்று சாதிப்போர், என் சொலார்-யாது சொல்ல இசையார்?, தாய் கொலை-தாயைக் கொலை செய்தல், சால்பு உடைத்து - தகுதியை யுடையது, என்பார் உம் - என்று சொல்வாரும், உண்டு - (உலகில்) உண்டு; (ஆதலின்) ஏதிலார் - அயலார், யாது உம் புகல - எதையுஞ் சொல்ல, இறைமகன் - அரசன், கோது ஒரீஇ - (அவற்றி லுள்ள) குற்றத்தை நீக்கி, கொள்கை - (குணத்தைக்) கொள்ளுதல், முதுக்குறைவு - பேரறிவாம், எ-று.

(விரை) நட்பில் மறைந்தொழுகும் பகைவர் கூறுஞ் சொற்களை யரசன் ஆராய்ந்து கொள்ளவேண்டு மென்பது கருத்து.

மந்திரி முதலாயினோர் அரசனுக்கு அயலார் அல்லாமையால் 'ஏதிலார்' என்றதற்குப் 'பகைவர்' என்றனம். 'முதுக்குறைவு'-

முதுமை குறைதல்; அதாவது, முன்னுள்ள அறியாமை நீங்கல். 'வெளிது' - பண்படியாகப் பிறந்த ஒன்றன்பாற் படர்க்கைக் குறிப்பு வினைமுற்று; வெண்மை - பகுதி, ஈறு கெடுதலும், "இனையவும்" என்றதனால் வந்த இகரத் தோற்றமுஞ் சந்தி, து - விகுதி. 'சால்பு' - உரிச்சொல்லடியாகப் பிறந்த தொழிற்பெயர்; சால் - பகுதி, பு - விகுதி. 'உண்டு' - தேற்றப்பொருளில் வந்த தொழிற்பெயர். 'ஒரீஇ' - ஒருவி என்னும் வினையெச்சம் சொல்லிசை நிறைத்தற்கண் வந்த வுயிரளபெடை.

---

கூகூ. கண்கூடாப் பட்டது கேடெனினுங் கீழ்மக்கட்
குண்டோ வுணர்ச்சிமற் றில்லாகும்—மண்டெரி
தான்வாய் மடுப்பினு மாசுணங் கண்டுயில்வ
பேரா பெருமூச் செறிந்து.

(ப-ரை) மண்டு எரிதான் - நெருங்கிய தீயானது, வாய் மடுப்பின் உம் - (தன்னைச்) சூழ்ந்துகொண்டாலும், மாசுணம் - பெரும் பாம்புகள், பேரா - (அவ்விடத்தினின்றும்) நீங்காது, பெரு மூச்சு எறிந்து - பெருமூச்சு விட்டு, கண் துயில்வ - நித்திரை செய்யாநிற்கும்; (அதுபோல) கேடு - கெடுதி, கண் கூடு ஆ - பிரத்தியட்சமாக, பட்டது எனின் உம் - (கண்களுக்குப்) புலப்படுவதா யிருந்தாலும், கீழ்மக்கள் கு - அறிவில்லார்க்கு, உணர்ச்சி உண்டு ஒ - (தமக்குக் கெடுதியைத் தருஞ் செயல்களை விட) அறிவு உண்டாகுமோ?, இல்லாகும் - இல்லையாம், எ-று.

(வி-ரை) 'கண்கூடு' - பிரத்தியட்சம்; 'கண்ணுக்குக் கூடுதல்' எனத் தொக்கு நின்ற நான்காம் வேற்றுமையின் பயனிலையாகிய முதனிலைத் தொழிற்பெயர் பெயர்ச்சொல்லோடு கூடியொருசொற் றன்மைப்பட்டுத் தொழிலாகுபெயராய் நின்றது. முன்னும் பின்னும் அரசா தியல்பு கூறப்படுதலில் 'கீழ்மக்கள்' என்றது மந்திரி முதலாயினோர் அறிவின் வழி நில்லாத அரசரை யென்க.

அறிவில்லாத அரசன்: கேடு வரினும் தீச்செயல்களினின்று நீங்கான் என்பது கருத்து.

'கேடு'-முதனிலை திரிந்த தொழிற்பெயர். 'எரி' - இகர விகுதியொடு புணர்ந்து குன்றிய வினைமுதற் றொழிற்பெயர். 'போா' - பலவின்பாற் படர்க்கை யெதிர்மறை வினைமுற்று எச்சமாய் 'எறிந்து' என்னும் எச்சத்தோடு முடிந்தது. [நன்னூல்-வி - ௩௨ - சூத்திரம்.] 'கண்டுயில்வ' - பலவின்பால் படர்க்கை வினை முற்று. 'துயில்' என்னும் வினைப்பகுதி 'கண்' என்னும் பெயர்ச் சொல்லோடு கூடி யொருசொற் றன்மைப்பட்டு நின்ற கண்டுயில்-பகுதி, வ் - இடைநிலை, அ - விகுதி. 'ஒ'- (வினைப்பொருட்டு

---

௩௪. நட்புப் பிரித்தல் பகைநட்ட லொற்றிகழ்தல்
பக்கத்தார் யாரையு மையுறுதல்—தக்கார்
நெடுமொழி கோறல் குணம்பிறி தாதல்
கெடுவது காட்டுங் குறி.

(ப-ரை) நட்பு - சிநேகரை, பிரித்தல் - பகைத்தலும்; பகை நட்டல் - பகைவரைச் சிநேகித்தலும்; ஒற்று இகழ்தல் - வேவு காரரை யவமதித்தலும்; பக்கத்தார் - அருகிலுள்ளோர், யார் ஐ உம் - எல்லாரையும், ஐயுறுதல் - சந்தேகித்தலும்; தக்கார் - பெரியோர், (கூறும்) நெடு மொழி - உறுதிச் சொற்களை, கோறல் - கேளா தொழிதலும்; குணம் பிறிது ஆதல் - குணம் வேறுபடுத லும், (ஆகிய இவ் ஆறும்) கெடுவது - (அரசனுக்குப் பின்வரும்) கெடுதியை, காட்டும் - முன் உணர்த்தும், குறி - அடையாளங்க ளாம், எ-று.

(வி-ரை) 'நெடுமொழி' - 'பொருளால் விரிந்த சொல்' ஆத லின் உறுதிமொழிமேல் நின்றது; ஏனை யிடங்களில் வரில் 'தமது மேம்பாடு சொல்லல்'! எனப் பொருள்படும். 'பக்கத்தார்' - பரி சனங்களாயுள்ளார். 'குணம் பிறிதாதல்' - அறநீதிகட்கு மாறுபடு தல், தனக்குத் தளர்வு வந்தவிடத்துப் பொருளுதவல், போர்முனைத்

றத் துணை செய்தல் முதலியவற்றைச் செய்து தாங்கும் நட்பினரைப் பகைக்கில் பெருங் கேடாதலாலும், பகைவர்-அயலினர்-நட்பினர் என்னு மூவகையோரிடத்து நிகழு நன்மை தீமைகளை யறிதற்குக் கண்களாயுள்ள வேவுகாரரை யவமதிக்கில் தோற்பு அடைதலாலும், பரிசனங்களைச் சந்தேகிக்கில் அவர்கள் தம்மிடத்து வைத்த தொழில்களை விடுதலாலும், தீயன கண்டா லவற்றைக் களைதற்கு நெருங்கி யறிவுறுத்தும் பெரியோர் சொற்களைக் கேளா தொழியில் தன்னைக் காத்த லொழிதலாலும், குடிகளை யுயரச் செய்து தன் வழிப்படுக்கும் அற நீதிகளில் மாறுபடிற் குடிகளை யிழத்தலாலும், 'நட்புப் பிரித்தல்' முதலிய அறுவகைத் தொழில்களையும் 'கெடுவது காட்டுங் குறி' என்றார். 'ஐயுறுதல்' - தொழிற்பெயர். ஈற்றில் அம் என்பது தொக்கு நின்ற 'ஐயம்' என்னும் பெயர்ச்சொல் உரிச்சொல்லடியாகப் பிறந்த 'உறு' என்னும் வினைப் பகுதியொடு கூடி யொருசொற் றன்மைபட்டு நின்ற ஐயுறு - பகுதி, தல்-விகுதி, 'கோறல்' - தொழிற்பெயர்; கொல்-பகுதி, முதனீளல் விகாரம், லகரக்கேடும் : தகரத் திரிபுஞ் சந்தி, தல்-விகுதி. உம்மை முற்று. எண்ணிடைச்சொல் தொக்கு நின்ற பெயர்ச் செவ்வெண்களின் இசையெச்சமாய் நின்று முற்றும்மையோடு கூடிய எண், 'குறி' என்னும் பால்பகா அஃறிணைப்பெயரோடு முடிந்தது.

---

கரு. பணியப் படுவோர் புறங்கடைய ராகத்
தணிவில் களிப்பினாற் றாழ்வார்க்—கணிய
திளையாண் முயக்கெனினுஞ் சேய்த்தன்றே மூத்தாள்
புணர்முலைப் போகங் கொளல்.

(ப-ரை) பணியப் படுவோர் - (தம்மால்) வணங்கப்படும் பெரியோர், புறங்கடையர் ஆக - தலைவாயிலி னிடத்தாராக, தணிவு இல் - குறைவில்லாத, களிப்பு இன் ஆல் - செல்வக் களிப்பினால், தாழ்வார் கு - (அவரை யெதிர்கொள்ளத்) தாமதிக்கும் அரசர்கட்கு, இளையாள் முயக்கு - சீதேவியினது போகம், அணியது

எனின் உம் - சமீபித் திருந்தாலும், மூத்தாள் - மூதேவியினது, புணர் - நெருங்கிய, முலைப்போகம் கொளல் - முலைப்போகத்தைக் கொள்ளுதல், சேய்த்து அன்று - தூரமல்ல, எ-று.

(வி-ரை) தமது செல்வக் களிப்பால் பெரியோர்களை யெதிர் கொள்ளாத அரசர்கள் கெடுவர் என்பது கருத்து.

'களிப்பு'-கள்ளுண்டதால் வரு மறதி; செல்வத்தால் தம்மை மறந்திருத்தல கூடும் ஆதலில் அம் மறதியைக் 'களிப்பு' என்றார்; 'களிப்பு' தொழிற்பெயர்; களி - பகுதி, ப் - சந்தி, பு - விகுதி. முயங்குதலால் வரும் போகத்தை 'முயக்கு' எனக் காரியத்தை காரணமாக உபசரித்தார்; 'முயக்கு'-முதனிலைத் தொழிற்பெயர்; இடைநின்ற ங் க் ஆதல் வலித்தல் விகாரம். 'அணியது' - அஃறிணை யொன்றன்பாற் படர்க்கைக் குறிப்பு வினைமுற்று; அணிமை-பகுதி, ஈறு கெடுதலும்: யகரத் தோற்றமுஞ் சந்தி, அ-சாரியை, து - விகுதி. 'சேய்த்து': சேய்மை-பகுதி, ஈறு கெடுதலும்: தகரத் தோற்றமும் சந்தி, து - விகுதி. 'இளையாள்' 'மூத்தாள்' பொருள் முரண்; இது விரோத அணியுள் அடங்கும். 'மூத்தாள்'-இறந்தகால வினைமுற்றுப் பெயர்; மூ - பகுதி, த் - சந்தி, த் - இடைநிலை, ஆள் - விகுதி.

---

௩௯. கண்ணோக் கரும்பா நகைமுகமே நாண்மலரா
இன்மொழியின் வாய்மையே தீங்காயா—வண்மை
பலமா நலங்கனிந்த பண்புடையா ரன்றே
சலியாத கற்ப தரு.

(ப-ரை) கண் நோக்கு - கண்களினது (தண்ணிய) பார்வையே, அரும்பு ஆ - அரும்பாகவும்; நகை முகம் ஏ - மலர்ந்த முகமே, நாள் மலர் ஆ - அன்றலர்ந்த. மலராகவும்; இன்மொழியின் வாய்மை ஏ - இனிய சொல்லாகிய வாய்மைச் சொல்லே, தீங்காய் ஆ - மதுரமான காயாகவும்; வண்மை - கொடையே, பலம் ஆ - பழமாகவும், நலம் கனிந்த - (இவ்வாறு அருள்) நன்மை

[illegible] பண்பு உடையார் அன்று எ-குணமுடைய அரசரல்லவா, [illegible]ாதது (கொடுத்தலில்) சலிப்பில்லாத, கல்ப தரு - கற்பக [illegible]ட்சமாவர், எ-று.

([illegible]ரை) 'ஈர்ங்காயா' எனப் பாடம் ஆயின் 'இனிய காயாக' [illegible] பொருள் கொள்க. வறியவரைத் தூரத்திற் காணும்போதே [illegible] பார்வை வேண்டுதலின் 'கண்ணேக் கரும்பா' எனவும், [illegible] கண்டு வந்தவிடத்து இனியமுகங் காட்ட வேண்டுதலின் '[illegible]முகமே நாண்மலரா' எனவும், அவரதாற்றுமை நீங்க இன் [illegible] சொல்லுதலும் கொடுத்தலுஞ் சிறிது வேறுபடினும் தம்மு [illegible]குமாதலின் 'தீங்காயா', 'பலமா' எனவுங் கூறினர். இவ்வாறுள்ள அரசர்கள் கற்பக விருட்ச மாவர் என்பது கருத்து.

'அரும்பா' - ஈறு தொக்க "செய" என்னும் வாய்பாட் டெச்சம்; அரும்பு என்னும் பெயர்ச்சொல் ஆ என்னும் வினைப் பகுதியோடு கூடி நின்ற அரும்பா-வினைப் பகுதி,தொக்கு நின்றன கு சாரியையும்: அ விகுதியும். 'தீங்காய்': தீமை - பகுதி, ஈறு கெடுதலும்: இனவெழுத்து மிகுதலுஞ் சந்தி; தீமை - இனிமை. பார்வை முதலியவற்றை யரும்பாக வுருவகஞ் செய்தமையால் உருவகவணி. 'கற்ப தரு' இரண்டும் வடசொல்லாதலின் வரு மொழி முதல் வல்லெழுத்து [நன்னூல் - மெ - ௩.௬௱ - சூத்திரத் தால்] இயல்பாயிற்று.

" இன்சொல் விளைநிலனு ஈதலே வித்தாக
வன்சொற் களைகட்டு வாய்மை யெருவட்டி
யன்புநீர் பாய்ச்சி யறக்கதி ரீனவோர்
பைங்கூழ் சிறுகாலைச் செய்."

என அறநெறிச்சாரத்திலுங் காண்க.

---

௩௭. வாங்குங் கவளத் தொருசிறிது வாய்தப்பின்
தூங்குங் களிறோ துயருறா—ஆங்கதுகொண்
டூரு மெறும்பிங் கொருகோடி யுய்யுமால்
ஆருங் கிளையோ டயின்று.

4

(ப-ரை) வாங்கும் - (தாம்) வாங்குகின்ற, கவள ணின்று, ஒரு சிறிது - ஒரு சிறிய பங்கு, வாய் த ணின்று தவறினால், தூங்கும் - அசைவாடிநிற்கும் யானைகளோ, துயர் உறா - துன்பத்தை யடையா கொண்டு - (தவறிய) அதனைக் கொண்டு, இங்கு வுலகில் ஊருகின்ற, எறும்பு ஒரு கோடி - ஒரு கோ ஆரும் - நிறைந்த, கிளை ஒடு - தமது சுற்றத்தோ உண்டு, உய்யும் - பிழைக்கும், எ-று.

(வி-ரை) இது தமது செல்வத்திற் சிறிது ரும் அனுபவித்தற் கமையினும் அதனைக் கண்டு அ நோவார் என்பதனை யுணர்த்தலில் ஒட்டணி; பிறி யெனினும், நுவலா நுவற்சியணி யெனினும் ஒக்கும்.

[தண்டியலங்காரம்]

"கருதிய பொருடொகுத் ததுபுலப் படுத்தற் கொத்ததொன் றுரைப்பினஃ தொட்டென மொழிப."

'அது' - பொருளை யடுத்து நின்ற சுட்டடியாகப் பிறந்த அஃறிணை யொன்றன்பாற் படர்க்கைக் குறிப்பு வினை முற்றுப்பெயர்; அ - பகுதி, து - விகுதி. 'கிளை' - கிளைத்தல்; இது முதனிலைத் தொழிலாகுபெயராய்ச் சுற்றத்தின்மேல் நின் றது. 'அயின்று' - இறந்தகால வினையெச்சம்; அயில் - பகுதி, ல் ன் ஆகத் திரிதல் சந்தி, ற் - இடைநிலை, உ - விகுதி.

---

௩அ. மாகஞ் சிறகக் குவித்து நிதிக்குவை யீகையி னெக்கழுத்த மிக்குடைய—மாகொல் பகைமுகத்த வெள்வேலான் பார்வையிற் றீடு நகைமுகத்த நன்கு மதிப்பு.

(ப-ரை) பகை முகத்த - பகைப்புலத்துள்ள, மா கொல் - யானையைக் கொன்ற, வெள் - நிணந் தோய்ந்த, வேலான் - வேலேந்திய அரசன், நகை முகத்த - (தனது) மலர்ந்த முகத்தி

னுள்ள, பார்வை இல் - பார்வையின்கண், நீட்டும் - (அவரவர் தகுதிக்கேற்ப) எழுதிய, நன்குமதிப்பு - நன்கு மதிப்பானது, மாகம் - ஆகாயம், சிறுக - (தன்னளவில்) குறைய, நிதி குவை - திரவியக் கூட்டத்தை, குவித்து - குவித்து, ஈகை இன் - (தன் வினை செய்வார் சுற்றத்தார் முதலியோர்க்கு அள்ளிக்) கொடுத் தலைப்பார்க்கிலும், எக்கழுத்தம் - இறுமாப்பு, மிக்கு உடைய - மிகவு முடையன, எ-று.

(வி-ரை) 'நன்குமதிப்பு' - நல்லமதிப்பு. பொருள்: மணி பொன் முதலியனவாகப் படுதலில் 'நிதிக்குவை' எனவும், அவ ரவர் தகுதிக்கேற்ப வரையறை செய்து குறித்தலைப் 'பார்வையிற நீட்டும்' எனவும், உயிரது கருத்தறிந்து அது மகிழின் மகிழ்த லும், கோபிக்கிற் கோபித்தலு முடைமையால் உடையான் றொழிலை யுடைமைமே லேற்றிப் 'பார்வையிற் நீட்டும் நன்கு மதிப்பு' எனவுங் கூறினர்.

[திருக்குறள்-பொருட்பால்-அங்கவியல்-எக-அதி. குறிப்பறிதல்-க0]

"நுண்ணிய மேன்பா ரளக்குங்கோல் காணுங்கால்
கண்ணல்ல தில்லை பிற."

என்றார் பிறரும்.

அரசன் தன் வினை செய்வோர் முதலினோர்கள் தகுதிக் கேற்க வுபசரித்தல் அவர்கட்கு வரையாது கொடுத்தலினு மிகவு மகிழ்ச்சியைச் செய்யும் என்பது கருத்து.

'சிறுக' - "செய" என்னும் வாய்பாட்டு வினையெச்சம்; சிறுகு - பகுதி, உகரக்கேடு சந்தி, அ - விகுதி; சிறுமை என்னும் பண்புப் பகுதி ஈறு கெட்டுக், கு என்னுந் தொழிற்பெயர் விகுதி யேற்று ஓர் பகுதியாக நின்றதென் றறிக. 'மிக்கு' - மிக என் னுஞ் செயவெனெச்சத் திரிபு; [நன்னூல் - வி - உஎ - சூத்திரம்.] 'ஈகை' - தொழிற்பெயர்; ஈ - பகுதி, கை - விகுதி.

௩௬. களைகணுத் தம்மடைந்தார்க் குற்றுழியு மற்றோர்
விளைவுன்னி வெற்றுடம்பு தாங்கார்—தளர்நடைய
தூனுடம் பென்று புகழுடம் போம்புதற்கே
தானுடம் பட்டார்க டாம்.

(ப-ரை) ஊன் உடம்பு - மாமிசத்தாலாகிய பூதவுடம்பு, தளர் நடையது என்று-(பிணி மூப்புக்களால்) நிலை தளருந் தன்மையை யுடையதென்று கருதி, புகழ் உடம்பு - (நிலை தளராத) புகழாகிய வுடம்பினை, ஓம்புதற்கு ஏ - வளர்க்கவே, உடம்பட்டார்கள் தாம் - உடம்பட்ட அரசர்கள், களைகண் ஆ - ஆதாரமாக, தம் அடைந் தார்க்கு - தம்மை யடைந்தவர்களுக்கு, உற்ற உழி உம் - (சிறிது துன்பம்) வந்தவிடத்தும், மற்று ஓர் விளைவு - வேறொரு பயனை, உன்னி - கருதி, வெறுமை உடம்பு - (தமது) பயனில்லாத அப் பூத வுடம்பினை, தாங்கார் - சுமவார், எ-று.

(வி-ரை) புகழுடம்பினை வளர்க்க வுடன்பட்டார்க்குப் பூத வுடம்பாற் பயனில்லை யென்பார் 'வெற்றுடம்பு' எனவும், அப் பூத வுடம்பினை வளர்க்க வுலகவின்பங் கருதார் என்பார் 'மற்றோர் விளைவுன்னித் தாங்கார்' எனவுங் கூறினார்.

ஆதலால், புகழுடம்பினை விரும்பினோர் பூதவுடம்பினைப் போற்றார் என்பது கருத்து.

இதனை, புறவின்பொருட்டுத் துலையி லேறிய சிபியினிடத் தும், தேவர் துன்ப நீங்க முதுகெலும்பைத் தந்த ததீசிமுனிவரிடத் துங் காண்க. 'களைகண்' - நீக்குமிடம்; அதாவது, துன்பத்தை நீக்கும் இடம் எனப் பொருள்மேல் நிற்றலில் உவமையாகுபெயர். 'விளைவு' - விளைவாலாகிய பயன்மேல் நிற்றலிற் காரணவாகு பெயர். 'உன்னி' - இறந்தகால வினையெச்சம்; உன் - பகுதி, ன் - சந்தி, இ - விகுதி. 'ஊனுடம்பு' - மூன்ற முருபும் பயனு முடன்றொக்க வேற்றுமைத் தொகைநிலைத் தழாத்தொடர். 'புக ழுடம்பு' - இருபெயரொட்டுப் பண்புத்தொகை. 'உடம்பட் டார்' - உடன்பட்டார்; மரூஉ; உடம்படு - பகுதி; இது உடம்

பாடு என முதனிலை திரிந்த தொழிற்பெயராக வரும், அகரச் சுட்டுத் தொகுத்தல்.

---

சO. தம்முடை யாற்றலு மாநமுந் தோற்றுத்தம்
இன்னுயி ரோம்பினு மோம்புக—பின்னர்ச்
சிறுவரை யாயினு மன்ற தமக்காங்
கிறுவரை யில்லை யெனின்.

(ப-ரை) சிறுவரை ஆயின் உம் - (தாம் வாழுநாள்) கணப் பொழுதானாலும், பின்னர் - பின்பு, மன்ற - நிச்சயமாக, தமக்கு இறுவரை - தமக்குச் சாங்காலம், இல்லை எனின் - இல்லையானால், தம் உடை - (காத்தற்பொருட்டுத்) தம்முடைய, ஆற்றல் உம் - வலிமையையும், மாநம் உம் - மாநமும், தோற்று - இழந்து, தம் இன் உயிர் - தமது இனிய வுயிரை, ஓம்பின் உம் - பாதுகாக்கி னும், ஓம்புக - பாதுகாக்கக்கடவர், எ-று.

(வி-ரை) 'மாநம்' - பழி பாவங்களுக்கு நாணுதல்.

இறப்பு உண்மையாதலின் வலியு மாநமு மிழவாது வாழ வேண்டும் என்பது கருத்து.

மாநமும் வலியுந் தோற்றலாவது - போர்முகத்து அஞ்சிப் புறங்கொடுத்தலும், இழிதொழில் செய்தலுமாம். உயிர் காத்தற் பொருட்டுத் தமது வலியு மானமு மிழப்பினு மவ்வுயிர் அதனால் நிலைபெறாதாதலின் அத் தொழிலாற் பயனில்லை என்பார் 'ஓம்பி னும்' என இழிவுசிறப்பும்மை தந்தார். 'தம்முடையாற்றல்' - உடைய என்னும் ஆறும் வேற்றுமைச் சொல்லுருபின் ஈறு தொகுத்தல். 'தோற்று' - இறந்தகால வினையெச்சம்; தோல்- பகுதி, ற் - இடைநிலை, ல் ற் ஆகத் திரிதல் சந்தி, உ - விகுதி. 'இறுவரை' - ஈறு என்னும் பண்புப் பெயர்ச்சொல் முதல் குறு கிக் காலங் காந்த பெயரெச்சமாய் நின்றது; வினைப்பகுதி யிலக் கண மறியார் 'இறு' என்பது ஈறு என முதனிலை திரிந்த தொழிற்பெயராயிற் றென்பார்.

சக. கலனழிந்த கற்புடைப் பெண்டிரு மைந்து
புலனொருங்கப் பொய்யொழிந் தாரும்—கொலைஞாட்பின்
மொய்ம்புடை வீரரு மஞ்சார் முரண்மறலி
தும்பை முடிசூடி னும்.

(ப-ரை) கலன் அழிந்த - மங்கலாபரணமிழந்த, கற்பு உடை - கற்பினையுடைய, பெண்டிர் உம் - பெண்களும்; ஐந்து புலன் - ஐம்புலன்களும், ஒருங்க - தம் வசப்பட, பொய் ஒழிந்தார் உம் - பொய்ப்பொருளினின்று நீங்கினோரும்; கொலை - கொலைத் தொழிலை யுடைய, ஞாட்பு இல் - யுத்தகளத்தில், மொய்ம்பு உடை - வலிமையையுடைய, வீரர் உம் - வீரர்களும்; முரண் - தாட்சிணிய மில்லாத, மறலி - இயமன், தும்பை - தும்பை மாலையை, முடி சூடின் உம் - தன் முடியிற் சூடி யெதிர்ப்பினும், அஞ்சார் - (தமது) நிலை கலங்கார், எ-று.

(வி-ரை) பொய்யொழிதலாவது - ஒரு பொருளினை மற்றொரு பொருளாகக் கற்பித்து வழங்கும் கற்பனையை யொழித்து அத னுண்மையை யறிதல். உயிர்போலக் கருதித் தாம் வழிபட்ட கணவரை யிழந்த பெண்களும், தேகத்தாலாகிய மறுமைப் பயனைப் பெற்ற பெரியோரும், வெற்றியை மெய்ப்பொருளாகக் கருதிய சுத்தவீரரும் தம் உயிர்க் கஞ்சாராதலில் 'முரண்மறலி தும்பை முடிசூடினும் அஞ்சார்' என்றார். 'ஒருங்க' - "செய" என்னும் வாய்பாட் டெச்சம்; ஒருங்கு - பகுதி, உகரக்கேடு சந்தி, அ - விகுதி. 'தும்பை' - இருமடியாகுபெயர், தும்பை என்னு முதற்பொருள் சினைப்பொருளாகிய மலர்க்காதலிற் பொருளாகு பெயராகியும், அது தன்னாலாகிய மாலைக்காதலிற் கருவியாகு பெயராகியும் நிற்றலால். தும்பைமாலை - போர் செய்தற்கு அணியு மாலை.

"வெட்சி நிரைகவர்தல் மீட்டல் கரந்தையாம்
வட்கார்மேற் செல்லுதல் வஞ்சியாம்—உட்கா
தெதிரூன்றல் காஞ்சி யெயில்வளைத்தல் நொச்சி
அதுவளைத்த லாகு முழிஞை—யதிரப்

பொருவது தும்பையாம் போர்க்களத்து மிக்கார்
செருவென் றதுவாகை யாம்.''

என்பதனு லறிக.

---

சஉ. புழுநெளிந்து புண்ணழுகி யோசனை நாறுங்
கழிமுடை நாற்றத்த தேனும்—விழலர்
விளிவுன்னி வெய்துயிர்ப்பர் மெய்ப்பயன் கொண்டார்
சுளியார் சுமைபோ டேற்கு.

(ப-ரை) *விழலர் - அறிவென்னும் உள்ளீ டில்லார், (தம் உடம்பு) புழு நெளிந்து - புழுக்கள் நெளிய, புண் அழுகி - புண்ணு யழிந்து, யோசனை - யோசனைதூரம், நாறும் - நாறு கின்ற, கழி - மிகுந்த, முடை நாற்றத்தது எனும் - தீ நாற்றத்தை யுடையதாயினும், விளிவு உன்னி - சாதலை நினைத்து, வெய்து உயிர்ப்பர் - பெருமூச் செறிவார்; மெய் பயன் - உடம்பாலாகிய பயனைக் கொண்ட பெரியோர், சுமை-அவ் வுடம்பாகிய சுமையை, போடுதற்கு - போட, சுளியார் - வெறுக்கார், எ-று.*

(வி-ரை) *'முடை' - தீநாற்றம். சுமை சுமத்தற்குக் கூலி பெற்றோர் அதனைச் சுமந்து செல்லுதற்கு வருத்த மடைந்து போடு மிடங் கண்டால் மகிழ்வடைதல்போல, உடம்பாலாகிய பய னைப் பெற்றோர் அவ் வுடம்பாகிய சுமையைச் சுமந்து திரிய வருத்தமடைந்து, அதனைப் போடுங்காலங் கண்டால் மகிழ்வடைவா ராதலில் 'சுளியார் சுமைபோடுதற்கு' என்றார். 'விழலர்'- 'விழலினது உள்ளீ டின்மைபோல அறிவு என்னும் உள்ளீடில்லா தவர்' எனப் பொருள் பட்டு நிற்றலில் பலபொரு ளொருசொற் பகுபதம், உவமையாகுபெயர் எனினு மமையும். 'நெளிந்து' - செயவெனெச்சத் திரிபு. பொய்யை 'மெய்' என்றது தகுதி வழக்கு. 'சுமை'-தொழிலாகுபெயர்; சுமை - பகுதி, அ - ஈறு தொகுத்தல், ஐ - விகுதி. 'போடுதற்கு': கு - வினையெச்ச விகுதி.*

---

சங. இகழி னிகழ்ந்தாங் கிறைமக னொன்று
புகழினு மொக்கப் புகழ்ப—இகழ்மன்னன்
சீர்வழிப் பட்டதே மன்பதைமற் றென்செய்யும்
நீர்வழிப் பட்ட புணை.

(ப-ரை) இறைமகன் - அரசன், ஒன்று - ஒரு பொருளை, இகழின் - இகழ்ந்தால், ஒக்க - (தாமும்) கூட, இகழ்ந்து-இகழ்ந்து, ஆங்கு - அது போல, புகழின் உம் - புகழ்ந்தாலும், ஒக்க புகழ்ப-(தாமும்) கூடப் புகழ்வார்கள்; (ஆதலால்) மன்பதை-மக்கட் கூட்டம், இகல்-வலிமையையுடைய, மன்னன் - அவ்வரசன், சீர் வழிப் பட்டது - குறிப்பின் வழிப்பட்டது; நீர் - நீர், (செல்லும்) வழிப் பட்ட - வழியிற் பொருந்திய, புணை - தெப்பம், மற்று என் செய்யும் - அவ் வழியிற் செல்லாது யாது செய்யும்? எ-று.

(வி-ரை) உலகு: அரசன் குறிப்பின் வழிப்பட்டது என்பது கருத்து.

'இகல் மன்னன்'-'இகலுமன்னன்' எனப் பொருள் கொள்ளில் வினைத்தொகையாம்; இகலுதல் - போர் செய்தல், 'ஆங்கு'-ஒப்புப் பொருளில் வந்த இடைச்சொல். 'மற்று' - செல்லும் வினையைமாற்றி நிற்றலால் வினைமாற்றுப் பொருளில் வந்த இடைச்சொல். முன்பு தொடங்கியதை முடித்தற்குப் பின்பு ஒரு பொருளை யேற்றிக் கூறினமையால் வேற்றுப்பொருள் வைப்பணி.

"முன்னொன்று தொடங்கி மற்றது முடித்தற்குப்
பின்னொரு பொருளி னுலகறி பேற்றி
யேற்றிவைத் துரைப்பது வேற்றுப்பொருள் வைப்பே."

---

சச. செவிசுடச் சென்றாங் கிடித்தறிவு மூட்டி
வெகுளினும் வாய்வெரீஇப் பேரா—கவிழ்மதத்த
கைம்மா வயத்ததே பாகுமற் றெத்திறத்தும்
அம்மாண் பினவே யமைச்சு.

(ப-ரை) பாகு - பாகன், எ திறத்து உம் - எவ்வகையாலும், கவிழ் மதத்த - சிந்து மதத்தினையுடைய, கைமா - யானையினது, வயத்தது - வசத்தினுவான் ; (அதுபோல) அமைச்சு - அமைச்சர் கள், எ திறத்து உம் - எவ்வகையாலும், அ மாண்பின - அத்தன் மையராவர் ; (ஆதலால்) சென்று-(அரசன் தன் னியல்பினின்று தவறினுல் அவனிடத்துப்) போய், செவி சுட - அவனது செவி வருந்த, இடித்து - உறுதிச் சொற்களைக் கூறி, அறிவு மூட்டி - அறிவு கொளுத்தி, வெகுளின் உம் - கோபித்தாலும், வாய் வெரீஇ - வாய் புலர்ந்து, போா - (அவனினின்று) நீங்கார், எ-று.

(வி-ரை) யானை தன்னியல்பி னின்றபோது தன் வசப்படுத்தி நடத்தும் பாகர் அது மதத்தால் வசமழிந்து தப்பியவழி யதனை விடா துபசரித்து அதன் வசப்பட்டு நடப்பர் என்பது தோன்றக் 'கவிழ் மதத்த' எனவும், 'எத்திறத்த' எனவுங் கூறினுர். இவ் வுவமைக்கேற்ப அரசன் தன்னியல்பி னின்றபோது அவன் வசப் பட்டு நடந்து, அதனி னீங்கியபோது அவனைக் கைவிடாது உப சரித்து அவன் வசத்தராய் அமைச்சர்கள் நடக்கவேண்டும் என உவமேயத்துக்கும் பொருள் விரிக்க. 'கவுள் மதத்த' எனப் பாடங் கூறிக் 'கபோலத்தினின் றொழுகு மதத்தினை யுடைய' எனப் பொருள் கூறுவாறு முளர். 'மூட்டி' - இறந்தகாலப் பிறவினை வினையெச்சம் ; மூட்டு - பிறவினைப் பகுதி, உகரக்கேடு சந்தி, இ-விகுதி. 'பாகு,' 'அமைச்சு' என்னும் இரண்டு சாதிப் பண்புக ளும் ஆகுபெயரா யுயர்திணைப் பொருள்மேல் நிற்பினும் சொற்க ளால் அஃறிணைப்பெயர்க ளாதலால் 'வயத்தது' எனவும், 'போா' எனவுங் கூறினுர். 'கூட இருப்பவர்' என்னும் பொருளில் வந்த "அமாத்தியர்" என்னும் வடசொல் தமிழில் அமச்சர் என வந்து இடைநிலைப்போலியால் 'அமைச்சர்' என நின்றது.

---

சரு. கைவரும் வேந்த னமக்கேன்று காதலித்த
செவ்வி தெரியா துரையற்க—ஒவ்வொருகால்
எண்மைய னேனு மரியன் பெரிதம்மா !
கண்ணில னுள்வெயர்ப்பி ஞன்.

(ப-ரை) வேந்தன் - அரசன், ஒவ்வொருகால் - ஒவ்வொரு காலத்தில், எண்மையன் எனும் - (காணுதற்கு) எளிய சமையத்தனாலும், பெரிது - எப்போதும், அரியன் - அரிய சமையத்தனவன்; (அதுவும் அன்றி) கண் இலன் - தாட்சிணிய மில்லாதவன்; உள் வெயர்ப்பினன் - உள்ளே கோபித்தலை யுடையவன்; (ஆதலால்) நமக்கு கை வரும் என்று - நமக்கு வசப்பட்டவனென்று, காதலித்த - விரும்பினவற்றை, செவ்வி தெரியாது - சமையந் தெரியாமல், உரையற்க - சொல்லுத லொழிக, எ-று.

(வி-ரை) உறவினர் அயலினர் என நோக்காது நீதியின் வழி நிறுத்தத் தண்டித்தலும், காலம் வருமளவும் பகைவ ரறியாமல் உள்ளே கோபித்தலுஞ் சாதிதரும மாதலால் 'கண்ணிலன் உள் வெயர்ப்பினன்' என்றார்.

அரசன் சமைய மறிந்து மந்திரி முதலாயினோர் சொல்ல வேண்டு மென்பது கருத்து.

'காதலித்த'-பெயரடியாகப் பிறந்த இறந்தகால வினைமுற்றுப்பெயர்; காதலி - பகுதி, த் - சந்தி, த் - இடைநிலை, அ - பலவின்பால் விகுதி. 'உரையற்க' - எதிர்மறை வியங்கோள் வினைமுற்று; உரை - பகுதி, அல் - எதிர்மறை விகுதி, ய் - தோற்றமும்: ல் ற் ஆகத் திரிதலுஞ் சந்தி, க - வியங்கோள் விகுதி. 'கண்' இடத்தினிகழ் பொருண்மேல் நிற்றலாலும், 'உள்' அங்கிருக்கிற மனத்தின்மேல் நிற்றலாலும் இடவாகுபெயர்கள். 'வெயர்ப்பினன்' - தொழிலடியாகப் பிறந்த பெயர்ச்சொல்; வெயர் - பகுதி, ப் - சந்தி, பு - விகுதி, அனைத்தும் ஓர் பகுதி, உகரக்கேடு சந்தி, இன் - சாரியை, ஆன் - விகுதி; இப் பகுதி வேர் என விகாரப்பட்டுப் பகுதியாய் வருதலும் உண்டு. கோபம் என்னுங் காரணத்தை அது வந்தவழி யுண்டாகும் வெயர்வையாகிய காரியமாக உபசரித்தார்.

சகூ. பழமை கடைப்பிடியார் கேண்மையும் பாரார்
கிழமை பிறிதொன்றுங் கொள்ளார்—வெகுளின்மன்
காதன்மை யுண்டே யிறைமாண்டார்க் கேதிலரும்
ஆர்வலரு மில்லை யவர்க்கு.

(ப-ரை) வெகுளின் - (குற்றங் கண்டு) கோபித்தால், பழமை - இவர் நமக்கு (அமைச்சுரிமையில்) தொன்றுதொட்டுள்ளார் என்பதையும், கடைப்பிடியார் - மறவாதிரார், (மறப்பார் என்றபடி); கேண்மை உம் - (இவர் நமக்கு) உறவினர் என்பதையும், பாரார் - நோக்கார்; பிறிது - (அவை) ஒழிய, கிழமை - (இவர் நமக்கு) உரியவர் என்பதனையும், ஒன்று உம் - சிறிதும், கொள்ளார் - நினையார்; (ஆதலால்) இறை - அரசியலில், மாண்டார் கு - மாட்சிமைப்பட்டார்க்கு, காதன்மை உண்டு ஏ - அன்புடைமை யுண்டா? அவர் கு - அவ்வாசருக்கு, ஏதிலர் உம் - (இவர்) அயலாரெனவும், ஆர்வலர் உம் - (இவர்) அன்புடையார் எனவும், இல்லை - இல்லை, எ-று.

(வி-ரை) இதனுள் அரசர் தன்மை இதுவாதலால் அவர் குறிப்பறிந்து நடக்கவேண்டும் என்பது எஞ்சி நிற்றலின் குறிப்பெச்சம். 'உறவினர்' - தம் வினை செய்வோர். உரியர் - தந்தை தாய் புதல்வர். அநபாயச் சோழர்பெருமான் ஒரு பசுவின் கன்றின் பொருட்டுத் தனது புதல்வன் செய்த குற்றத்துக் கீடாக அவனைத் தேர்க்காலி லூர்ந்தது காண்க. 'பழைமை', 'கிழமை' இரண்டும் பண்பாகுபெயர்கள். 'மாண்டார்' - பண்படியாகப் பிறந்த வினைமுற்றுப்பெயர்; மாண் - பகுதி, ட் - இறந்தகால இடைநிலை, ஆர் - விகுதி; பகுதி மாள் எனில் 'இறந்தார்' எனப் பொருள்படும்.

---

சஎ. மன்னர் புறங்கடை காத்தும் வறிதேயாம்
எந்நலங் காண்டுமென் றெள்ளற்க—பன்னேநாள்
காத்தவை யெல்லாங் கடைமுறைபோய்க் கைகொடு
வேத்தவையின் மிக்குச் செயும். [த்தூ

(ப-ரை) மன்னர் - அரசர்கள், புறங்கடை - தலைவாயிலை, பல் நெடுநாள் - பல நாள், யாம் - நாம், வறிது காத்து உம் - வாளா காத்திருந்தும், என் நலம் - யாது பயனை, காண்டும் என்று - பெற்றோமென்று, எள்ளற்க - கைவிடுதலொழிக; (ஏனெனில்) காத்தவை எல்லாம் - காத்த நாள்களெல்லாம், கடைமுறை போய் - முடிவிற் சென்று, கைகொடுத்து - உதவி, வேந்து அவை இல் - அரச சபையில், மிக்கு செயும் - மேம்பட்டிருக்கச்செய்யும், எ-று.

(வி-ரை) அரசரைக் காத்திருத்தல் பயன்படாதிராது என்பது கருத்து.

'பன்னெடுநாள்' - பலநாள்; நீட்டித்த நாளாதலால் 'பன்னெடுநாள்' என்றார்; இது இரண்டு தொடர் மூன்று சொல் ஆதலின் இரண்டு தொடரும் பண்புத்தொகைநிலைத்தொடராகக் கொள்க. 'எள்ளற்க' - 'நிந்தித்தலொழிக' என்பது பொருள். நிந்தித்தல் - கைவிடுதலாதலின் 'கைவிடுதலொழிக' என்றனம். 'காண்டும்' - தன்மைப் பன்மை யிறந்தகால வினைமுற்று; காண் - பகுதி, டும் - விகுதி. வேந்து அவை-வேத்தவை: வலித்தல் விகாரம். 'மிக்கு' - செயவெனெச்சத் திரிபு.

---

சஅ. உறுதி பயப்ப கடைபோகா வேனும்
இறுவரை காறு முயல்ப—இறுமுயிர்க்கும்
ஆயுண் மருந்தொழுக்க றீதன்று லல்லனபோல்
ஆவனவு முண்டு சில.

(ப-ரை) இறும் உயிர் கு உம்-சாகும் உயிர்களுக்கும், ஆயுள் - வாழ்நாளை, (தரும்) மருந்து - மருந்தினை, ஒழுக்கல் - வாயில் விடுதல், தீது அன்று - குற்றமல்ல (நன்மையைத் தரும் என்றபடி); (அதுபோல,) அல்லனபோல்-ஆகாதனபோலக் காணப்பட்டு, ஆவன உம் - ஆகுங் காரியங்களும், சில உண்டு - சில வுள ; (ஆதலால்) உறுதி - பயனை, பயப்ப - தருஞ் செயல்கள், கடைபோகா

எனும் - முடிவு பெறுவாயினும், இறுவரை காறு உம் - சாங்கால மளவும், முயல்ப - (விடாது) முயல்வார், எ-று.

(வி-ரை) பயன்றருஞ் செயல்கள் முடிவு பெறுவிடினுந் தாமுள்ளவளவு முயலவேண்டும் என்பது கருத்து.

'உறுதி' - தொழிலாகுபெயர் ; உறு - பகுதி, தி - விகுதி. 'பயப்ப' - எதிர்கால வினைமுற்றுப்பெயர் ; பய - பகுதி, ப்-சந்தி, ப் - இடைநிலை, அ - பலவின்பால் விகுதி. 'முயல்ப' - பலர் பாற் படர்க்கை யெதிர்கால வினைமுற்று ; முயல் - பகுதி, ப - விகுதி; இவற்றுள் பலர்பால், பலவின்பால் வேறுபா டறிக. 'இறும்': இறு - பகுதி, உகரக்கேடு சந்தி, உம் - விகுதி. 'ஒழுக்கல்' - தொழிற்பெயர் ; ஒழுகு - பகுதி, இடையில் க் விரித்தல் விகாரம், உகரக்கேடு சந்தி, அல் - விகுதி. 'ஆவனவும்'-உம்மை ஆகாமையும் என நிற்றலில் எதிரது தழீஇய எச்சப்பொருட்டு.

---

௪௯. முயலாது வைத்து முயற்றின்மை யாலே
யுயலாகா வூழ்த்திறத்த வென்றூர்—மயலாயும்
ஊற்ற மிறுவிளக்க மூழுண்மை காண்டுமேன்
றேற்று ரேறிகான் முகத்து.

(ப-ரை) ஊற்றம் - அசைவின்றி நிற்றலை, இறு - ஒழிந்த, விளக்கம் - விளக்கினை, ஊழ் உண்மை-ஊழ்வினை யுளதென்பதை, காண்டும் என்று - காண்போமென்று, மயல் ஆய் உம் - மயங்கியும், எறி - வீசுகின்ற, கால்முகத்து - காற்றுக்கெதிரில், ஏற்றூர் - எற்றுவோ ரில்லை ; (ஆதலால்) முயலாது வைத்து - (ஒரு காரியத்தை) முயற்சி செய்யாமல் வைத்து, முயற்று இன்மை ஆல் - முயற்சி யில்லாமையால், ஊழ் திறத்த - ஊழ்வினையின் பகுதிகள், உயல் ஆகா - தப்பமாட்டா, என்றூர் - என்று அறிவுடையோர் கருதார், எ-று.

(வி-ரை) 'உயல்' - தப்புதல். 'ஊற்றமி றாவிளக்கம்' எனப் பாடமோதி 'மறைவின்றி யிருக்குந் தூய விளக்கு' எனப் பொருள்

கொள்ளல் இயைபில்லாமை காண்க. அசைவாடி நிற்றல் விளக்கிற் கியற்கை யென்பார் 'ஊற்றமிறுவிளக்கம்' எனவும், அவ்வியல்பினையுடைய விளக்கினைப் பெருங்காற்றுக் கெதிரேயேற்றுவோ ரிலர் என்பார் 'மயலாயும்' எனவும், ஊழ்வினை யுளதென்பதை நோக்காது இடைவிடாது அறிவுடையார் முயல்வார் என்பார் 'என்னுர்' எனவுங் கூறினர்.

ஊழ்வினையாலாகிய பயன் தன்னளவிற் பெரிதாயினு முயற்சியைக் கைவிடார் என்பது கருத்து.

'முயற்று', 'உயல்'-இரண்டுந் தொழிற்பெயர்கள்; முயல்-பகுதி, து - விகுதி, ல் த் இரண்டும் றகரமாகத் திரிதல் சந்தி. உய் - பகுதி, ய் - சந்தி, அம் மெய் தொகுத்தல் விகாரம், அல் - விகுதி. 'ஊற்றம்' - தொழிற்பெயர்; ஊன்று - பகுதி, இடையிலுள்ள மெல்லெழுத்து வல்லெழுத்தாதல் விகாரம், உகரக்கேடு சந்தி, அம் - விகுதி.

---

ருo. உலையா முயற்சி களைகணு வூழின்
வலிசிந்தும் வன்மையு முண்டே—உலகறியப்
பான்முளை தின்று மறலி யுயிர்குடித்த
கான்முளையே சாலுங் கரி.

(ப-ரை) உலையா-வருந்துத லில்லாத, முயற்சி-முயற்கியை, களைகண் ஆ - ஆதாரமாகக் கொண்டு, ஊழ் இன் வலி - போகூழ் வினையினது வன்மையை, சிந்தும் - கெடுக்கும், வன்மை உம் - வலிமையும், உண்டு - உளது; (அதற்கு) உலகு அறிய - உலகிலுள்ளோ ரறிய, பால் முளை-ஊழ்வினையாகிய அங்குரத்தை, தின்று - தின்று, மறலி - இயமனது, உயிர் குடித்த - உயிராகிய நீரைக் குடித்த, கால் முளை ஏ - மிருகண்டு புத்திரனாகிய மார்க்கண்டேயரே, சாலும் - போதுமான, கரி - சாட்சி, எ-று.

(வி-ரை) உடையான் வினையை யுடைமைமே லேற்றி 'உலையா முயற்சி' எனவும், ஊழ்வினை: தன்னைச் செய்வோன் என்

இருப்பினும் விடாது என்பது தோன்ற 'ஊழின் வலி' எனவும், அதனைக் கெடுத்த லருமை தோன்ற உம்மை தந்து 'வன்மையும்' எனவும், தின்ற பின் நீர் குடித்த லியல்பாதலின் 'குடித்த' எனவும், மறலியுயிர் கெடுத்தவன் சிவபெருமான் ஆயினும் அவன் வினை மார்க்கண்டேயர் வழிபாட்டா லாதலின் 'மறலி யுயிர் குடித்த கான்முளை' எனவும் கூறினர். முன்னர்க் கூறிய முயற்சியை வற்புறுத்தப் பின்னரும் ஆகமவளவையால் அனுவதித்தார். மிருகண்டு புத்திரர் மார்க்கண்டேயர். தம் பிதாவின் அனுஞை யால் திருக்கடையூர் என்னுந் திருப்பதியி லெழுந்தருளிய சிவபெரு மானை வழிபட்டு இயமனை வென்றார் என்பது புராண வரலாறு. 'உலகு' - வடமொழியில் உயிர்கள்மேல் நிற்றலின் இடவாகு பெயரன்று. தொக்கு நின்ற இரண்டாமுருபு இசையெச்சமாய் நின்ற 'கொண்டு' என்னும் வினையெச்சத்தோடு முடிந்தது. ஊழை முளையாக வுருவகஞ் செய்து, உயிரை நீராக வுருவகஞ் செய்யாமையின் இஃது ஏகதேசவுருவகவணி.

---

ருக. கால மறிந்தாங் கிடனறிந்து செய்வினையின்
மூல மறிந்து விளைவறிந்து—மேலுந்தாஞ்
சூழ்வன சூழ்ந்து துணைமை வலிதெரிந்
தாள்வினை யாளப் படும்.

(ப-ரை) காலம் அறிந்து - (செய்தற்குரிய) காலந் தெரிந்து, இடன் அறிந்து - (செய்து முடித்தற்கேற்ற) இடந் தெரிந்து, செய்வினை இன் - செய்யுங் கருமத்தினது, மூலம் அறிந்து - காரணந் தெரிந்து, விளைவு அறிந்து - (அதனாலாய) பயன் தெரிந்து, மேலும் - பின்னும், தாம் சூழ்வன - தாம் ஆலோசிப்பனவற்றை, சூழ்ந்து - (பெரியோரோடு) ஆலோசித்து, துணைமை - (அதனை முடித்தற்குத் தனக்குத்) துணையாயினோரது, வலி தெரிந்து - வலிமை யறிந்து, ஆள்வினை - கருமம், ஆளப்படும் - (பின்பு) செய்யப்படும், எ-று.

(வி-ரை) 'ஆளப்படும்' - ஆள என்னும் வினையெச்சத்தினின்று தொழிற்பெயர் கொண்டு 'படும்' என்பதைத் தேற்றப் பொருளில் வந்த தொழிற்பெயராக்கிக் 'கருமத்தை யாளுதல் வேண்டும்' எனப் பொருள் கூறினும் அமையும். வினை செய்தற்குரிய காலம் வெம்மையுங் குளிருந் தம்முளொத்து நோய் செய்யாத காலமா யிருக்கவேண்டுதலின் 'கால மறிந்து' எனவும், யாரும் தந்நிலத்து வலியராதலில் 'இடனறிந்து' எனவும், முடிக்குங் கருமத்தி னியல்பை முன்னே யாராயில் செய்து முடித்த லெளிதாதலிற் 'செய்வினையின் மூலமறிந்து' எனவும், அதனால் நிகழ்வின்கண் வரு நட்டத்தினும் எதிர்வின்கண் வரும் ஊதியம் பெரிதாக வேண்டுதலின் 'விளைவறிந்து' எனவும், அவற்றைப் பெரியோரோடு ஆலோசிக்க வேண்டுதலில் 'சூழ்வன சூழ்ந்து' எனவும், அதனை முடித்தற்குத் தம் வலியன்றித் தமக்குத் துணையாய் நின்றவரது வன்மையும் அறியவேண்டுதலில் 'துணைமை வலி தெரிந்து' எனவுங் கூறுதலால் முன்னர்க் கூறிய முயற்சியைத் தொடங்கும் உபாயம் இதனாற் கூறப்பட்டது. 'விளைவு'-தொழிலாகுபெயர்.

---

௫௨. மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்டுஞ்சார்
எவ்வெவர் தீமையு மேற்கொள்ளாற்—செவ்வி
அருமையும் பாரா ரவமதிப்புங் கோள்ளார்
கருமமே கண்ணாயி னார்.

(ப-ரை) கருமம் ஏ கண் ஆயினார் - கருமமே கண்ணாக வுள்ளார், மெய் வருத்தம் - (பொறுத்தற்கரிய) உடம்பினது வருத்தத்தை, பாரார் - நினையார்; பசி நோக்கார் - (சுட்டு வருத்தும்) பசியை யெண்ணார்; கண் துஞ்சார் - (இடைவிடா நினைப்பால்) நித்திரை செய்யார்; எவ்வெவர் தீமை உம் - (தங் கருத்திற் கிடையூறு செய்யும்) யாவர் தீங்கினையும், மேற்கொள்ளார் - கருதித் தடைபடார்; செவ்வி அருமை உம் - காலவேற்றுமையினது அருமையையும், பாரார் - நோக்கார்; அவமதிப்பு உம் - (பொருமை

யாற் பிறர் செய்யும்) நன்குமதியாமையையும், கொள்ளார் - உட் கொள்ளார், எ-று.

(வி-ரை) காலவேற்றுமை யாவது - வெயில் பனி மழையாக வேறுபடுதல்.

முன்பு கூறிய வுபாயத்தாற் றொடங்கிய முயற்சியுடையோர் அது முடியுமளவுந் தமக்கு வருந் தீங்குகளை நோக்கார் என்பது கருத்து.

'கண்டுஞ்சார்' - உயர்திணையோடு சார்ந்த அஃறிணைப் பெயர் உயர்திணை முடிபேற்று நின்றது திணைவழுவமைதி. 'எவ் வெவர்' - எவர் எவர் என்பது மருவியது; இது பன்மைப் பொரு ளில் வந்த அடுக்கு. 'எ' - பிரிநிலைப்பொருட்டு.

---

௫௩. சிறிய பகையெனினு மோம்புத றேற்றார்
பெரிதும் பிழைபா டுடையர்—நிறைகயத்
தாழ்நீர் மடுவிற் றவளை குதிப்பினும்
யானை நிழல்காண் பரிது.

(ப-ரை) நிறை - நிறைந்த, கயம் - கயமாகிய, தாழ் - தாழ்ந்த, நீர் - நீரையுடைய, மடு இல் - மடுவின்கண், தவளை குதிப்பின் உம் - தவளை குதித்தாலும், யானை - யானையானது, நிழல் - (தனது) தேக நிழலை, காண்பு அரிது - காணுதலு மரிது; (ஆத லின்) பகை சிறிய எனின் உம் - பகைவர் சிறியாராலும், ஓம்பு தல் - (இவர் பகைமையைப்) பாதுகாத்தலை, தேற்றார் - அறியா தார், பெரிது உம் - மிகவும், பிழைபாடு - பிழைபடுதல், உடையார் - உடையாராவர், எ-று.

(வி-ரை) உருவிற் பெரிய யானையானாலும் நீரிற் பிரதிபிம் பித்த தனது தேக நிழலை யுருவிற் சிறிய தவளையாற் காணுதலும் அரிதாதல்போலத், துணை வலிமுதலிய வலியிற் பெரிய அரசனாலு லும், அவற்றாற் சிறிய அரசரது பகைமையை முன்னறிந்து காவா ராயின் அதனால் தமது பெருமையை யிழப்பர் என உவமைக்

கேற்ப வுவமேயத்திற்கும் பொருள் விரித்துக்கொள்க. 'கயம்', 'மடு' என்பன 'குளம்' எனப் பொருள் படினும் வடிவில் வேறுபாடுடைமையின் இருபெயரொட்டுப் பண்புத்தொகை; பண்புத்தொகைக்கு இடைப்பிறவரவின்மையால் 'தாழ்நீர்' என்பதை மடுவிற்கு அடையாக்கி ஒருசொல்லாகக் கொள்க. 'பாடு' - முதனிலை திரிந்த தொழிற்பெயர்; படு - முதனிலை. 'காண்பு'- தொழிற்பெயர்; காண் - பகுதி, பு - விகுதி; இதனிறுதியில் எதிரதுதழீஇய எச்சவும்மை தொகுத்தல்.

---

௫௪. புறப்பகை கோடியின் மிக்குறினு மஞ்சார்
அகப்பகை யோன்றஞ்சிக் காப்ப—அனைத்துலகுஞ்
சொல்லொன்றின் யாப்பார் பரிந்தோம்பிக் காப்பவே
பல்காலுங் காமப் பகை.

(ப-ரை) அனைத்து உலகு உம் - எல்லா வுலகங்களையும், சொல் ஒன்று இன் - சொல் ஒன்றினால், யாப்பார் - தம் வசப்படுத்து மெய்யறிவுடையோர், காமம் - காமமாகிய, பகை - உட்பகை, (தம்மை யடையாமல்) பல் கால் உம்-பல காலமும், பரிந்து-வருந்தி, ஓம்பி - மறவாமல், காப்ப - காப்பார்; (அதுபோல) புறப்பகை - புறத்திற் பகைவர், கோடி இன் - கோடி யென்னு மளவினும், மிக்கு உறின் உம் - மிக வந்தாலும், அஞ்சார் - (அவர்களை) அஞ்சாராகி, அகம் பகை - உள்ளத்திற் பகையுடையோர், ஒன்று அஞ்சி - ஒருவரை யஞ்சி, காப்ப - (தம்மைக்) காப்பார், எ-று.

(வி-ரை) உலகைச் சாபானுக்கிரகங்களால் தம் வசப்படுத்தலின் 'அனைத்துலகுஞ் சொல்லொன்றின் யாப்பார்' எனவும், தவத்தினர்க்குக் காமம் கூடாவொழுக்க மாதலின் 'பல்காலும் பரிந்தோம்பிக் காப்ப' எனவும், முன்னே யறிந்து தம்மைக் காத்தலின் 'அஞ்சார்' எனவும், அறியவுந் தம்மைக் காக்கவும் படாது கிழறுத்தலின், 'அகப்பகை யொன்றஞ்சிக் காப்ப' எனவுங் கூறதலால், உறவினராய்த் தம்மை மறைத்தொழுகும் உட்பகைவரை

யரசர் நீக்கவேண்டும் என்பது கருத்து. இரண்டிடத்தும் பகை உடையார்மே னிற்றலில் தொழிலாகுபெயர். மிக்கு - செயவெ னெச்சத் திரிபு. 'அஞ்சார்' - வினைமுற்றெச்சம். 'யாப்பார்' - எதிர்கால வினைமுற்றுப்பெயர் ; யா - பகுதி, ப் - சந்தி, ப் இடை நிலை, ஆர் - விகுதி.

---

ருரு. புறநட் டகம்வேர்ப்பார் நச்சுப் பகைமை
வெளியிட்டு வேறுதல் வேண்டும்—கழிபெருங்
கண்ணோட்டஞ் செய்யேல் கருவியிட் டாற்றுவார்
புண்வைத்து மூடார் பொதிந்து.

(ப-ரை) கருவி இட்டு - சத்திரஞ் செய்து, ஆற்றுவார் - (புண்ணை) ஆற்றுவோர், புண் - அந்தப் புண்ணினை, பொதிந்து வைத்து - மறைத்துவைத்து, மூடார் - மூடுவோ ரில்லை ; (ஆத லால்) புறம் நட்டு - புறத்திற் சிநேகித்து, அகம் வேர்ப்பார் - உள்ளே கோபிப்பவரது, நஞ்சு - நஞ்சையொத்த, பகைமை - பகையை, வெளியிட்டு - மறைக்காமல், வேறுதல் வேண்டும் - (அவரினின்று) நீங்குதல் தக்கது ; கழி - மிகுந்த, பெருங் கண் ணோட்டம் - பெரிய தாட்சிணியத்தை, செய்யேல் - செய்யாதே, எ-று.

(வி-ரை) சத்திரஞ் செய்தாற்றும் புண்ணை மூடிவைப்பில் அது உள்ளே புடைகொண்டு கெடுதி விளைத்தல்போல, உட்பகை யுடையோராய்க் காலம் வாய்க்குமளவும் புறத்திற் சிநேகித்தொழுகு வோரை யவரது நடையால் மறைக்கிற் பின்பு தமக்குக் கெடுதி தப்பாது வருமாதலால் 'நச்சுப் பகைமை வேறுதல் வேண்டும்' எனவும், முன்னர்க் கூறி அதனையே பின்னரும் வலியுறுத்தற்குக் 'கழிபெருங் கண்ணோட்டஞ் செய்யேல்' எனவுங் கூறினார்.

உட்பகையுடையோரை யஞ்சித் தம்மைக் காத்தலுமன்றி யவ ரியல்பறியின் அப்பொழுதே யவரைக் கைவிடவேண்டும் என் பது கருத்து.

'நட்டு' என்னு முதல்வினை 'வேர்ப்பார்' என்னுஞ் சினை வினையோடு முடிந்தது. 'நச்சுப் பகைமை' - நஞ்சு முன்பு தண்ணி தாயினும் பின்பு உயிர்க்கிறுதி விளைத்தலின் தொழில்பற்றி வந்த வுவமைத்தொகை. 'அகம் வேர்ப்பார்' - உயர்திணையோடு சேர்ந்த அஃறிணை யுயர்திணை முடிபேற்றது திணைவழுவமைதி. 'செய்யேல்' - முன்னிலையொருமை யேவ லெதிர்மறை வினை முற்று; செய்-பகுதி, ய்-சந்தி, எல்-விகுதி. நஞ்சு 'நச்சு' என மென்றொடர் வன்றொடர் ஆனது.

---

௫௬. நட்பிடைக் குய்யம்வைத் தெய்யா வினைசூழ்ந்து
வட்கார் திறத்தராய் நின்றார்க்குத்—திட்பமாம்
நாளுலந்த தன்றே நடுவ னடுவன்மை
வாளா கிடப்பன் மறந்து.

(ப-ரை) நட்பு இடை - சிநேகரிடத்து, எய்யா - (அவர்) அறியாமல், குய்யம் - வஞ்சித்தலை, வைத்து - (தம் மனத்துள்) கொண்டு, வினை - (அவர்கட்குத்) தீங்கு (செய்ய), சூழ்ந்து - காலம் பார்த்து, வட்கார் திறத்தர் ஆய் - பகைவரது தன்மைய ராய், நின்றார் கு - நின்றவர்க்கு, திட்பம் ஆம் - வலிய, நாள் - ஆயுள் நாள், உலந்தது அன்று - முடிந்ததில்லை; நடுவன் - இய மன், (நடுவுநிலைமையுடையோன் ஆதலின்) நடுவு அன்மை - (அவர்க ளது) நடுவுநிலைமை யல்லாத தீச் செயல்களை, மறந்து - நினையா மல், வாளா கிடப்பன் - வாளா இருப்பன் (அவ்வாறிருத்தலால்), எ-று.

(வி-ரை) இயமன் யாவரிடத்துங் கண்ணோடாது ஒரே தன் மையனு யிருத்தலின் 'நடுவன்' எனவும், அவன் அந்நிலையனுத லால் பிறரையும் அந்நிலையர் எனக் கருதுதல் அவனுக் கியல்பாத லால் 'நடுவன்மை வாளாகிடப்பன் மறந்து' எனவுங் கூறினர். 'வட்கார்' - கெடுதலைச் செய்வார்; வட்கு - பகுதி, உகரக்கேடு சந்தி, ஆர்-விகுதி. 'நடுவன்': நடு-பகுதி, வ்-சந்தி, அன்-விகுதி. 'திட்பம்' - பண்புப்பெயர்; திண்மை - பகுதி, ஈறு கெடுதலும்:

ண் ட் ஆகத் திரிதலுஞ் சந்தி, ப் - விரித்தல் விகாரம், அம் - விகுதி; பம் - விகுதியெனக் கூறுவாரும் உளர். 'வாளா' - இடைச்சொல். 'எய்யா' - ஈறு கெட்ட எதிர்மறை வினையெச்சம்; எய் - பகுதி, ய் - சந்தி, ஆ - எதிர்மறை விகுதி, அனைத்தும் ஓர் பகுதி, கெட்டது - மல் விகுதி.

---

ருஎ. மனத்த கறுப்பெனி னல்ல செயினும்
அனைத்தெவையுந் தீயவே யாகும்—எனைத்துணையும்
தீயவே செய்யினு நல்லவாக் காண்பவே
மாசின் மனத்தி னவர்.

(ப-ரை) கறுப்பு - (ஒருவர்மேல்) கோபம், மனத்த எனின் - தம் மனத்தி னிடத்தனவானால், நல்ல செயின் உம் - (அவர்கள் தமக்கு) நல்ல கருமங்களைச் செய்தாலும், அனைத்து எவை உம் - அந் நன்மைகள் யாவும், தீய எ ஆகும் - தீய கருமங்களாகவே முடியும்; மாசு இல் - (ஒருவர்மேல்) கோப மில்லாத, மனத்தி னவர் - மனத்தை யுடைவர்கள், எனைத்துணை உம் - எவ்வள வேனும், தீய எ - தீய கருமங்களேயே, செய்யின் உம்-(தமக்குச்) செய்தாலும், நல்ல ஆ - நல்ல கருமங்களாக, காண்ப - காண்பார், எ - று.

(வி-ரை) ஒருவர் செய்யும் நன்மை தீமையாதற்கும் விருப்பு வெறுப்புக் காரணம் ஆதலால் அறிவுடையோர் அவற்றைக் கொள்ளாது ஒருவர் செய்யுங் கருமங்களின் குணங் குற்றங்களை யாராய்ந்து கொள்வார் என்பது எஞ்சி நின்றது குறிப்பெச்சம். இதனால் மனத்தாலாய பயன் கூறப்பட்டது. 'கறுப்பு' - கோபமாகிய குறிப்புணர்த்தும் உரிச்சொல்; இது கருமை என்றவழி அப் பொருள் படாது தொழிற்பட்டு நின்றவழி அப் பொருள்படும்; செவப்பு என்பதும் அது;

"கறுப்புஞ் சேவப்பும் வெகுளிப் பொருள."

என்பது தொல்காப்பியம்.

௬அ. இனியவ ரென்சொலினு மின்சொல்லே யின்னார்
கனியு மொழியுங் கடுவே—அனல்கொளுந்தும்
வெங்காரம் வெய்தெனினும் நோய்தீர்க்கு மெய்பொ
சிங்கி குளிர்ந்துங் கொலும். [டிப்பச்

(ப-ரை) வெம் காரம் - வெய்ய காரமானது, அனல் - தீப் போல, கொளுந்தும் - எரியும், வெய்து எனின் உம் - முன்பு வெம்மையதாயினும், நோய் தீர்க்கும் - (பின்பு தண்ணிதாய்) நோயைத் தீர்க்கும்; சிங்கி - விஷமானது, மெய் பொடிப்ப - உடம்பு புளகிப்ப, குளிர்ந்து உம் - (முன்பு) தண்ணிதாயிருப்பி னும், கொலும் - (பின்பு வெய்யதாய்க்) கொலை செய்யும்; (அது போல) இனியவர் - (தம்மேல்) விருப்பமுடையோர் (உரியவர் என்றபடி), என் சொல்லின் உம் - யாது சொன்னாலும் (செவிக் கின்னாதசொல் என்றபடி), இன் சொல் ஏ-(பின்பு நன்மையைத் தருதலால்) இனிய சொல்லேயாம்; இன்னார் - (தம்மேல்) வெறுப் புடையார், கனியும் மொழி உம் - செவிக்கினிய சொல்லும், கடு ஏ - (பின்பு தீமையைத் தருதலால்) விஷமாம், எ-று.

(வி-ரை) சொல்லளவையானோக்காது அதன் குணங் குற் றங்களை நோக்கிக் கொள்ளவேண்டும் என்றலால் இதனால் வாக் கிறைலாய பயன் கூறப்பட்டது. 'இன்னார்' - 'இனிமை செய் யார்' என்னும் பொருள் தருதலின் பண்படியாகப் பிறந்த எதிர் மறைக் குறிப்பு வினைமுற்றுப்பெயர்; இனிமை - பகுதி, "ஈறுபோ இடையுகரம்" என்றதனால் இகரங் கெடுதலும்: னகரத் தோற்ற மும் சந்தி, ஆ - எதிர்மறை விகுதி, அனைத்தும் ஓர் பகுதி, ஆர் - விகுதி, முதல் நின்ற ஆ தொகுத்தல் விகாரம். 'கொளுந்தும்' - எதிர்காலப் பெயரெச்சம்; கொளுந்து - பகுதி, உகரக்கேடு சந்தி, உம் - விகுதி. கொள் என்னும் வினைப்பகுதி உகரச்சாரியையும், இடையிற் சந்தியையும், தொழிற்பெயர் விகுதியையும் பெற்று ஓர் பகுதியாய் நின்றது.

௩௬. பொய்குறளை வன்சொல் பயனிலவென் றிந்நான்கும்
எய்தாமை சொல்லின் வழுக்காது—மெய்யிற்
புலமைந்துங் காத்து மனமா சகற்றும்
நலமன்றே நல்லா றெனல்

(ப-ரை) பொய் - பொய்யும், குறளை - புறங்கூறலும், வன் சொல் - கடுஞ் சொல்லும், பயன் இல - பயனில் சொற் கூறலும், என்ற - என்று சொல்லப்பட்ட, இ நான்கு உம் - இந்த இழி சொற்கள் நான்கும், சொல் இன் - தாம் கூறும் சொற்களில், எய் தாமை - பொருந்தாமலும், மெய் இன் - வாய்மையினின்று, வழுக் காது - தவறாமல், புலம் ஐந்து உம் - பொறிகளைந்தையும், காத்து உம் - பாதுகாத்தும், மனம் மாசு - மனக்குற்றத்தை, அகற்றும் - நீக்கும், நலம் அன்று ஏ - நற்கருமமல்லவா, நல் ஆறு - உயிர்குறுதி யைத் தரும் நன்னெறி, எனல் - என்று சொல்லப்படுதல், எ-று.

(வி-ரை) மன வாக்குக் காயங்களாலாகிய குற்றங்களை யொழித்துத் தூயராதலே மறுமைப் பயன் என்பது கருத்து.

இல்வாழ்வோர்க்கு இவை புரியனவாதலின் 'நல்லாறு' எனவும், வாக்குக்குற்றம் ஒழிதலுங் காயக்குற்றம் ஒழிதலும் மனக்குற்றம் ஒழித்தற்குச் சாதனங்களாதலால், 'எய்தாமையும்', 'காத்தும்' என எண்ணும்மை தந்துங் கூறினர். 'நான்கும் சொல் லின் எய்தாமை' - வாக்குக் குற்றம் ஒழிதல். 'மெய்யிற் புல மைந்துங் காத்தல்' - காயக்குற்றம் ஒழிதல். 'மனமாசகற்றல்' - மனக்குற்றம் ஒழித்தல். நான்கையும் இழிசொல் என்றது.

" பொய்குறளை வன்சொற் பயனில்சொல் லென்னும்
இவ்வகை நான்கும் இழிந்தகு சொல்லே."

என்பது திவாகரத்துட் காண்க. வாய்மையாவது - பொருள் இன்பங்களைப்பற்றி நிகழும் பொய்மை யொழிதல். 'எய்தாமை', 'வழுக்காது' - எதிர்மறை வினையெச்சங்கள்; எய்து - பகுதி, உகரக்கேடு சந்தி, ஆ - எதிர்மறை விகுதி, அனைத்தும் ஓர் பகுதி, மை - விகுதி. வழுக்கு - பகுதி, உகரக்கேடு சந்தி, ஆ - எதிர்

மறை விகுதி, அனைத்தும் ஓர் பகுதி, து - விகுதி; வழு என்னும் வினைப்பகுதி சந்தியையும், தொழிற்பெயர் விகுதியையும் ஏற்று ஓர் பகுதியாய் நின்றது.

---

௬0. நல்லா றொழுக்கின் றலைநின்றார் நல்கூர்ந்தும்
அல்லன செய்தற் கொருப்படார்—பல்பொறிய
செங்கட் புலியே றறப்பசித்துந் தின்னுவாம்
பைங்கட் புனத்த பைங்கூழ்.

(ப-ரை) பல் பொறிய - பல புள்ளிகளையுடைய, செம்மை கண் - செவந்த கண்ணையுடைய, புலி ஏறு - புலிப்போத்து, அற - மிகவும், பசித்தும் - பசித்திருந்தாலும், பைங்கண் - பசிய இடத்தை யுடைய, புனத்த - கொல்லையிலுள்ள, பைங்கூழ் - பசிய பயிரை, தின்னு ஆம் - தின்னமாட்டாவாம்; (அதுபோல) நல் ஆறு - நன்னெறியில், ஒழுக்கு இன் தலை-ஒழுகும் ஒழுக்கத்தினிடத்து, நின்றார் - நின்றவர்கள், நல்கூர்ந்தும்-வறுமை யடையினும், அல்லன-தீக் கருமங்களை, செய்தற்கு - செய்ய, ஒருப்படார் - உடன்படார், எ-று.

(வி-ரை) ' நல்லாறு '-முன்னர்க் கூறிய மன வாக்குக் காயங்களாலாகிய குற்றங்க ளொழிதல். ' அல்லன ' - பிறனில் விழைதல், பிறர்பொருள் விரும்பல் முதலியன.

முன்னர்க் கூறிய நன்னெறியி னின்றோர் வறுமை யடையினும் அந் நெறியினின்று பிழையார் என்பது கருத்து.

' நல்கூர்ந்தும் ', ' பசித்தும் ' இரண்டும் எதிர்கால வினையெச்சங்கள் ; நல்கூர் - வினைப்பகுதி, து - சாரியை, ந் தோற்றமும் : உகரக்கேடுஞ் சந்தி, உம் - எதிர்கால வினையெச்ச விகுதி. ' ஒருப்படார் ' - எதிர்மறை வினைமுற்று ; விகாரப்பட்டு நின்ற ஒரு என்னும் எண்ணுப்பெயர் வினைப்பொருளில் வரும் படு விகுதியோடு சந்தி பெற்று நின்ற ஒருப்படு - வினைப்பகுதி, உகரக்கேடு சந்தி, ஆ - எதிர்மறை விகுதி, அனைத்தும் ஓர் பகுதி, ஆர் - விகுதி,

விருதியின் முதனிலை தொகுத்தல், உடன்பாட்டில் வரின் 'ஒருப்பட்டார்' என வரும்.

---

கூக. குலம்விற்றுக் கொள்ளும் வெறுக்கையும் வாய்மை
நலம்விற்றுக் கொள்ளுந் திருவும்—தவம்விற்றுங்
கூனோம்பும் வாழ்வு முரிமைவிற் றுண்பதூஉந்
தானோம்பிக் காத்த றலை.

(ப-ரை) குலம் - (தனது) குலத்தை. விற்று கொள்ளும் - விற்றுக் கைக்கொள்ளும், வெறுக்கை உம் - பொருளும்; வாய்மை நலம் - உண்மையாகிய பயனை, விற்றுக் கொள்ளும் - விற்றுக் கொள்ளும், திரு உம் - செல்வமும்; தவம் விற்று-(தான் செய்த) தவத்தை விற்று, ஊன் ஓம்பும் - (தனது) உடம்பைப் பாதுகாக்கும், வாழ்வு உம் - வாழ்க்கையும்; உரிமை விற்று - (தனது) உரிமைப் பொருளை விற்று, உண்பதூஉம் - உண்ணுதலும் (தன்னைவர் தடையாமல்) தான் ஓம்பி - தான் மறவாது, காத்தல் - பாது காத்தல், தலை - (எல்லா அறங்களுக்கும்) முதன்மையான அறச் செய்கையாம்.

(வி-ரை) வறுமை யுற்றவிடத்துத் தன் குலத்திற் பிறந்தானல்லானுக்குப் பொருள் வேண்டி மகட்கொடை நேர்தலும், மன்றிற் பொய்க்கரி கூறியும், தான் செய்த தவப்பயனைப் பிறருக்குத் தத்தஞ் செய்தும், அரசராற் றனது குடிப்பிறந்தோர்க்குக் கொடுத்த உரிமையை விற்றும் வாழ்தல் கடைப்பட்ட தொழிலாதலால் அதனை நினையா தொழியவேண்டும் என்பார் 'தானோம்பிக் காத்தல்' எனவும், அவ்வாறு நினையாதொழிதலே எல்லா அறச்செய்கைகட்குந் தலையான அறம் என்பார் 'தலை' எனவுங் கூறினர். 'ஊன்' - காரியமாகிய உடம்பிற்காதலால் காரணவாகுபெயர்; தவத்தாலாய பயனைத் 'தவம்' எனக் காரியத்தைக் காரணமாக வுபசரித்தார். 'உரிமை' - உரித்தாதல்; அது பொருள்மேல் நிற்றலில் தொழிலாகுபெயர். 'தலை' - பண்பாகு பெயர்.

கூஉ. இடைதேரிந் தச்சுறுத்து வஞ்சித் தெளியார்
உடைமைகொண் டேமாப்பார் செல்வம்—மடநல்லார்
பொம்மன் முலைபோற் பருத்திடினு மற்றவர்
நுண்ணிடைபோற் றேய்ந்து விடும்.

(ப-ரை) எளியார் - (தம்மில்) எளியவரை, இடை தெரிந்து - சமைய மறிந்து, அச்சு உறுத்து - பயப்படுத்தி, வஞ்சித்து - வஞ்சனை செய்து, உடைமை - (அவர்களது) பொருளை, கொண்டு - அபகரித்து, ஏமாப்பார் - இறுமாப்பு அடைவோரது, செல்வம் - செல்வமானது, மடம் - மடமைக் குணத்தையுடைய, நல்லார் - பெண்களது, பொம்மல் - பூரிக்கும், முலைபோல் - தனம்போல, பருத்திடின் உம் - அதிகரிக்கினும், அவர்-அப் பெண்களது, நுண் இடைபோல-அருகிய இடைபோல, தேய்ந்துவிடும்-(அப்போதே) தேயும், எ-று.

(வி-ரை) பிறரது பொருளை யபகரித்து வாழ்வோரது செல்வம் பெருகுவது போலக் காணப்படினும் அப்போதே யழியும் என்பது கருத்து.

மடமை - பெண்கள் குணத்துள் ஒன்று; அதாவது, அறியாமை. அஞ்சு 'அச்சு' - மென்றொடர் வன்றொடராய் விகாரப் பட்டு வந்த தொழிற்பெயர். 'உறுத்து' - உரிச் சொல்லடியாகப் பிறந்த பிறவினைப் பகுதி வினையெச்சப் பொருளில் வந்தது ; உறு-பகுதி, த் - சந்தி, து - பிறவினைப் பகுதி, அனைத்தும் ஓர் பகுதி; விகுதி பெற்று வரில் உறுத்தி என வரும். 'ஏமாப்பார்'-எதிர்கால வினைமுற்றுப்பெயர் ; ஏமா - பகுதி, ப் - சந்தி, ப் - இடைநிலை, ஆர் - விகுதி ; ஏமம் என்னும் பெயர்ச்சொல் ஈறு தொக்கு ஆ என்னும் வினைப்பகுதியோடு கூடி ஓர் பகுதியாய் நின்றது. யா என்னும் வினைப்பகுதி முதனின்ற யகரமெய் கெட்டு ஆ என நின்றது. 'பருத்திடின்' - எதிர்கால வினை யெச்சம் ; பரு - வினைப்பகுதி, த்-சந்தி, து - சாரியை, இடு-பகுதிப்பொருள் விகுதி, அனைத்தும் ஓர் பகுதி, உகரக்கேடு சந்தி, இன்-விகுதி ; பருமை என்னும் பண்புப் பகுதி ஈறு கெட்டு வினைப்பகுதியாய் நின்றது.

கூங. பெற்ற சிறுகப் பெருத பெரிதுள்ளும்
சிற்றுயிர்க் காக்க மரிதம்மா—முற்றும்
வரவர வாய்மடுத்து வல்விராய் மாய
எரிதழன் மாயா திரா.

(ப-ரை) பெற்ற - (தாம்) பெற்ற பொருள்கள், சிறுக-அற்ப மாக, பெருதது - பெருத பொருளே, பெரிது உள்ளும் - மிக்க தாகக் கருதும், சிறு உயிர் கு - சில வாழ்நாட்களையுடைய வுயிர் களுக்கு, ஆக்கம் - (பெற்ற) செல்வத்தா லாய பயன், முற்று உம் - (அவ் வாழ்நாள்) முழுதும், அரிது - இல்லை; எரி தழல்-எரியுந் தீ, வல் விராய் - வலிய விறகு முதலிய விராய்கள், வர வர - கிடைக் கக் கிடைக்க, வாய்மடுத்து - எரித்து, மாய - (அவ் விராய்கள்) அழிய, மாயாது இரா - (அத்தீ) மாயாமல் இரா, (மாயும் என்ற படி), எ-று.

(வி - ரை) விறகு முதலிய விராய்களிற் பற்றிய தீ பல வகைப்படுதலால் 'இரா' எனப் பன்மை முடிபு தந்தார். 'கிடைத்த விராய் போதும்' என்றமையாத தீ மேலும்மேலும் எரிக்க முய லுதலால் அவ் விரா யழியத் தானும் அழிதலின், 'கிடைத்த செல் வம் போதும்' என்றமையாது மேலுமேலுங் கருதுதலால், அச் செல்வ மழியத் தாமும் அழியும் உயிர்கட்குத் தொழில்பற்றி வந்த உவமையணியாய் நின்றது. இதனுற் 'பெற்ற செல்வம் போதும்' என்று மகிழ்கூடவேண்டும் என்பது எஞ்சிநிற்றலிற் குறிப்பெச்சம். 'பெரிது' என்றதனுல் 'பெருதது' எனக் கொள் ளப்பட்டது; து - தொகுத்தல் விகாரம்.

---

கூச. தத்த நிலைக்குங் குடிமைக்குந் தப்பாமே
யொத்த கடப்பாட்டிற் ருளுன்றி—எய்த்தும்
அறங்கடையிற் செல்லார் பிறன்போருளும் வெஃகார்
புறங்கடைய தாகும் பொருள்.

(ப - ரை) தத்தம் - தந்தமக்குரிய, நிலை கு உம் - (வருணத்தின்) நிலைமைக்கும், குடிமை கு உம் - குடிப்பிறப்பி னொழுக்கத்திற்கும், தப்பாமே - வழுவாமல், ஒத்த கடப்பாடு இல் - ஒத்த முறையில் நின்று, தாள் ஊன்றி - முயற்சி செய்து, எய்த்து உம் - மறந்தும், அறம் கடை இல் - பாவ நெறியில், செல்லார் - செல்லாது, பிறன் பொருள் உம் - பிறனது பொருளையும், வெஃகார் - விரும்பாதாருடைய, புறங்கடையது - தலைவாயிலினிடத்ததாக, பொருள் ஆகும் - பொருள் தானே வந்து கூடும்.

(வி - ரை) வருணத்தி னிலைமைக்குங் குடிப்பிறப்பி னொழுக்கத்திற்கு மறுதலையான தொழில் செய்தல் பாவம் ஆதலால் 'அறங்கடையிற் செல்லார்' எனவும், பிறன் பொருளை விரும்பில் தமக்குரிய பொருளுங் கெடுதலால் 'பிறன்பொருளும் வெஃகார்' எனவும், இந் நெறிக்கணின்று முயலுவோர்க்கு அறக்கடவுளே பொருள் கூட்டும் ஆதலால் 'புறங்கடையதாகும் பொருள்' எனவுங் கூறினார்.

பொருள் தேடுங்கால் தீநெறிக்கணின்று பொருள் தேடாது நன்னெறிக்கணின்று தேடுவோர்க்குப் பொருள் கைகூடும் என்பது கருத்து.

'தாளூன்றி' - 'முயன்று' என்னும் பொருட்டாதலால் தாளூன்று-பகுதி, உகரக்கேடு சந்தி, இ - இறந்தகால வினையெச்ச விகுதி; 'தாள்' என்னும் பெயர்ச்சொல் 'ஊன்று' என்னும் வினைப் பகுதியோடு கூடி யொருசொற் றன்மைப்பட்டு நின்றது. 'வெஃகார்' - எதிர்மறை முற்றுப்பெயர்; வெஃகு - பகுதி, உகரக்கேடு சந்தி, ஆ-எதிர்மறை விகுதி, அனைத்தும் ஓர் பகுதி, ஆர் - விகுதி, விகுதியின் முதனிலை தொகுத்தல்.

---

கூரு. போதுமகளே போலுந் தலையாயார் செல்வம்
குலமகளே யனையோர் செல்வம்—கலனழிந்த
கைம்மையார் பெண்மை நலம்போற் கடையாயார்
செல்வம் பயன்படுவ தில்.

(ப - ரை) தலையாயார் - முதலாயினோரது, செல்வம் - செல்வம், (பலர்க்கும் பயன் படுதலால்) பொதுமகள் ஏ - பொதுமகளிரது இன்பத்தையே, போலும் - ஒக்கும்; ஏனையோர் செல்வம் - இடையாயினோரது செல்வம், (ஒருவர்க்குப் பயன் படுதலால்) குலமகள் ஏ போலும் - குலமகளிரது இன்பத்தையே யொக்கும்; கடையாயார் - கடையாயினோரது, செல்வம் - செல்வம், கலன் அழிந்த - மங்கலாபரணமிழந்த, கைமை - விதவைத்தன்மை, ஆர் - பொருந்திய, பெண்மை - மகளிரது, நலம் போல் - இன்பம் போல, பயன்படுவது - (யாவர்க்கும்) பயன்படுதல், இல் - இல்லை, எ-று.

(வி - ரை) செல்வர் பலவகை யியல்பினரா யிருப்பினும் பலர்க்கும் பயன்படுவோரும், தமக்குப் பயன்படுவோரும், யாவர்க்கும் பயன்படுத லில்லோரும் என மூவகை யியல்பினராயிருத்தலின் அவர்களைத் 'தலையாயார்' ஏனையோர் 'கடையாயார்' எனப் பிரித்தும், அச் செல்வம் பயன்படுத லுடைமைக்கும் இன்மைக்கும் காண்ட லளவையாக அவற்றைப் 'பொதுமகள்', 'குலமகள்', 'கைம் பெண்' இவர்களது நலத்தின்மே லேற்றியும் செல்வத்தினு லாய பயன் கூறினார். 'போல்' - போல என்னும் வினையெச்சத்தின் ஈறு தொகுத்தல். 'படுவது' - இடைநிலை பெற்று வந்த தொழிற் பெயர்; படு - பகுதி, வ் - எதிர்கால இடைநிலை, அ - சாரியை, து - விகுதி.

---

கூகூ. வள்ளன்மை யில்லாதான் செல்வத்தின் மற்றையோ
நல்குரவே போலு நனிநல்ல—கோன்னே
அருளில னன்பிலன் கண்ணறைய னென்று
பலரா லிகழப் படான்.

(ப-ரை) வள்ளன்மை - கொடுக்குந் தன்மை, இல்லாதான் - இல்லாதவனது, செல்வத்து இன் - செல்வத்தைப் பார்க்கிலும் மற்றையோன் - கொடுக்குந் தன்மை யுடையோனது, நல்குரவு ஏ - வறுமையே, நனி நல்ல-மிகவும் நல்லன; (ஏனெனில்) அருள்

இலன் - கருணை இல்லாதவன், அன்பு இலன் - அன்பில்லாதவன் கண்ணறையன் என்று - தாட்சிணிய மில்லாதவனென்று, பலர் ஆல் - பலராலும், கொன்னே - வாளா, இகழப்படான் - இகழப் படான், எ-று.

(வி-ரை) வறுமை - மணி பொன் ஆடை முதலியன இல் லாமைமேல் நிற்றலால் 'நல்ல' எனப் பன்மைப் பயனிலை தந்தும், 'நல்குரவே நனிநல்ல' என உடையான் அடையும் பயனை யுடைமைமே லேற்றியுங் கூறினர். இதனால் முன்னர்க் கூறிய கடையாயினர் பிறருக்குப் பயன்படுத லில்லாமையா லடையும் பயன் கூறப்பட்டது, 'வள்ளல்' - பண்புப்பெயர்; வண்மை - பகுதி, ஈறுகெடுதலும்: ல் - தோன்றுதலும் சந்தி, அல் - விகுதி; இது பண்பாகுபெயராய் உடையான்மேல் நின்றது. 'மற்றையோன்' என்பதன் பகுதி வினைமாற்றுப் பொருளில் வந்தது. 'போலும்' - அசைநிலை. 'கொன்னே' - கொன் என்னும் இடைச்சொல் லிறுதியில் நின்ற ஏ விரித்தல் விகாரம். 'கண்ணறையன்' - 'கண்ணோட்டம் அறுத லுடையவன்' என நிற்றலால் தொழிற்பெயர்; கண்ணறு - பகுதி, உகரக்கேடு சந்தி, ஐ - தொழிற்பெயர் விகுதி, அனைத்தும் ஓர் பகுதி, ய்-தோற்றம் சந்தி, அன் - விகுதி; 'கண்' என்னும் பெயர்ச்சொல் 'அறு' என்னும் வினைப் பகுதியோடு கூடி ஒருசொற் றன்மைப்பட்டு நின்றது; 'கண்ணறை' என வரில் தொழிலாகுபெயராகக் கொள்க; இதுபோலக் "காதறை", "மூக்கறை" என வருதல் காண்க.

---

கூஎ. ஈகை யரிதெனினு மின்சொலினு நல்கூர்தல்
ஓகோ கொடிது கொடிதம்மா—நாகொன்று
தீவினைக் கம்மியனால் வாய்ப்பூட் டிடப்படின்மற்
றுவா விவரென் செய்வார்.

(ப-ரை) ஈகை - (ஒருவர்க்கேனும்) கொடுத்தல், அரிது எனின் உம் - (தமக்கு) முடியாதாயினும், இன் சொல் இன் உம்-

இனிய வசனஞ் சொல்லுதலிலும், நல்கூர்தல் - வறுமை யடைதல், ஓகோ - மிகவும், கொடிது கொடிது - கெட்டது கெட்டது; தீவினை - பாவமாகிய, கம்மியன் ஆல்-கம்மாளனால், நா கொன்று-நாவெழாமற் சிதைத்து, வாய் பூட்டிடப்படில் - வாய் பூட்டப்பட்டால், இவர் - இவர்கள், ஆவா - ஐயோ, என் செய்வார் - யாது செய்வார்?, எ-று.

(வி-ரை) இதுமுதல் "சிறு முயற்சி" செய்து என்பதீறாக வாக்கினுலாய பயன் கூறுகின்றார். பொருள் வசத்ததாகிய கொடுத்தல் முடியாதாயினும் தம் வசத்ததாகிய இன்சொல்லேனுஞ் சொல்லாதொழிதல் பெரும் பாவம் என்பார், 'கொடிது கொடிது' என்றும் அடங்காது, 'ஓகோ', 'அம்மா' என வியப்பிடைச் சொற்கள் தந்தும், இவர்களைப் புகழ்வார் போன்று பழிப்பார் 'தீவினைக் கம்மியனுல் வாய்ப் பூட்டிடப்படில், ஆவா இவரென் செய்வார்' என்றுங் கூறினர். 'ஈகை'-தொழிற்பெயர்; ஈ-பகுதி, கை - விகுதி. 'கொடிது கொடிது' - தீமை மிகுதிப் பொருளில் வந்த அடுக்குத் தொடர். 'ஆவா' - இரக்கப் பொருளில் வந்த இடைச்சொல்; இது புகழ்வதுபோலப் பழித்திறம் புணர்த்து கூறுதலின் இலேசவணியு ளடங்கும்.

---

கூஅ. சொல்வன்மை யுண்டேனிற் கொன்னே விடுத்தொழிதல்
நல்வினை கோறலின் வேறல்ல—வல்லைத்தம்
ஆக்கங் கேடுவ துளதேனினு மஞ்சுபவோ
வாக்கின் பயன்கொள் பவர்.

(ப-ரை) சொல் வன்மை - சொல்லின் வலிமை, உண்டு எனில் - உளதானால், கொன்னே - (அதனுலாய) பயன் பெருது, விடுத்து ஒழிதல் - கைவிடுதல், நல்வினை - அறச் செய்கையை, கோறல் இன் - இழத்தலினின்றும், வேறு அல்ல - வேறல்லவாம்; வாக்கு இன்-வாக்கினுலாய, பயன் கொள்பவர்-பயனைக் கொள்ளுவோர், (அச் சொற்செலவால்) வல்லை - விரைவில், தம் ஆக்கம் -

தமது செல்வம், கெடுவது-கெடுதல், உளது எனின் உம் - உண்டானாலும், அஞ்சப ஒ - (அது செய்ய) அஞ்சுவாரோ (அஞ்சார் என்றபடி), எ-று.

(வி-ரை) சொல்லின் வலிமையாவது - தமது சொல் பிறரிடத்துச் சென்று ஒருவருக்குப் பயன்படுதல்; அவ்வாறு பயன்படுஞ் சொல்லைத் தம்மி லெளியார்க்குப் பயன்படுத்தா தொழிதல் பெரும்பாவம் என்பார் 'நல்வினை கோறலின் வேறல்ல' எனவும், மனம் வாக்குக் காயங்களாலாகிய பயனைக் கொள்ள முயல்வோர் அவற்று ளொன்றாகிய வாக்காலாய பயனால் தமக்கு வரும் பயன் கெடினும் அஞ்சார் என்பார் 'தம் மாக்கங் கெடுவ துளதெனினு மஞ்சபவோ' எனவுங் கூறினார். 'கோறல்' - தொழிற்பெயர்; கொல் - பகுதி, முதனீளல் விகாரம், தல் - விகுதி, லகரக்கெடும்; தகரத்திரிபுஞ் சந்தி; சில பகுதிகள் விகுதிமுதலியவற்றோடு புணரும்போது விகாரப்பட்டுச் சா செத்தான், வா என வந்தான் வருதல் காண்க. 'வாக்கின் பயன்' - மூன்றும் வேற்றுமை யுருபும் பயனும் உடன்றொக்க தழாத்தொடர். 'ஒ' - எதிர்மறைப் பொருட்டு. 'இன்' - நீக்கப் பொருட்டு.

---

கூகூ. சிறுமுயற்சி செய்தாங் குறுபயன் கொள்ளப்
பெறுமேனிற் றூழ்வரோ தாழார்—அறனல்ல
எண்மைய வாயினுங் கைவிட் டரிதேனினும்
ஒண்மையிற் றீர்ந்தொழுக லார்.

(ப-ரை) அறன் அல்ல - தருமமல்லாத பாவச் செயல்கள், எண்மைய ஆயின் உம் - (செய்தற்கு) எளியன ஆனாலும், கைவிட்டு - (அவற்றைச்) செய்யா தொழிந்து, அரிது எனின் உம் - (செய்தற்கு) முடியாதாயினும், ஒண்மை இன் - அறச்செய்கையினின்றும், தீர்ந்து - நீங்கி, ஒழுகலார்-நடவாதவர், சிறு முயற்சி செய்து - சிறிய முயற்சியைச் செய்து, உறு பயன் - (அம் முயற்சியால்) மிக்க பயனை, கொள்ளப் பெறும் எனில் - அடையக் கூடு

மாஞல், தாழ்வர் ஓ-(அது செய்யத்) தாமதிப்பரோ?, தாழார் - தாமதியார், (விரைந்து செய்வார்), எ-று.

(வி-ரை) 'சிறு முயற்சி' - வாக்கின் றொழில்; அது செய்தல் யாவருக்கும் எளிதாதலால் 'சிறு முயற்சி' எனவும், மனம் உடம்புகளால் செய்யும் அறச்செய்கை யாவருக்கும் அரிதாதலால் அதனை 'அரிது' எனவும் கூறினர். 'எண்மையவாயினும்' என்றதனுல் அறன் அல்ல என்பன பொய், புறங்கூறல், கடுஞ்சொற்சொல்லல், பயனில்சொற் கூறலாம். 'ஒழுகலார்' - எதிர்மறைத்தெரிநிலை வினைமுற்றுப்பெயர்; ஒழுகு - பகுதி, உகரக்கேடு சந்தி, அல் - விகுதி, அனைத்தும் ஓர் பகுதி, ஆர் - விகுதி, 'இன்' உருபு நீக்கப்பொருட்டு.

---

எ0. செயக்கடவ வல்லனவுஞ் செய்துமன் னென்பார்
நயத்தகு நாகரிக மென்னுஞ்—செயிர்த்துரைப்பின்
நெஞ்சுநோ மென்று தலைதுமிப்பான் றண்ணளிபோன்
றெஞ்சா தெடுத்துரைக்கற் பாற்று.

(ப-ரை) செயக்கடவ - (தம்மால்) செய்யத்தக்கன, அல்லனவும் - அல்லாதனவற்றையும், செய்தும் - (நாம்) செய்து முடிப்போம், என்பார் - என்று (தம்மை யடைந்தோர்க்குத் திடம்) சொல்லுவோராது, நய தகும் - (யாவராலும்) விரும்பத்தக்க, நாகரிகம் - தாட்சிணியம், என் ஆம் - என்ன பயன் படும்?, (அத்தாட்சிணியம்) செயிர்த்து - கோபித்து, உரைப்பின்-சொன்னல், நெஞ்சு நோம் என்று - மனம் வருந்துமென்று, தலை - (பிறாது) தலையை, துமிப்பான் - வெட்டுவோனது, தண் - குளிர்ந்த, அளி போன்று - கிருபையைப் போல, எஞ்சாது - குறையாமல், எடுத்து உரைக்கல் பாற்று - எடுத்துச் சொல்லுந் தன்மையை யுடையது, எ-று.

(வி-ரை) 'தண்ணளிபோல்' எனப் பாடம் ஓதுவாரு முளர். 'நாகரிகம்' என்பது தம்மொடு பழகினேர் நஞ்சிடக் கண்டும்

மறக்கா றண்டு பின்று மவரொடு பழகுந் தன்மைத் தாகலால் நயத்தகும்' எனச் சாதி யடை தந்தார்.

"முந்தை யிருந்து நட்டோர் கொடுப்பின்
நஞ்சு முண்பர் நனிநா கரிகர்."

என்பதனானும் அறிக. பயன்பெறக் கருதித் தம்மை யொருவ ரடைந்தால் அது தம்மால் முடியாதாயின் 'முடியாது' என்றாது 'முடிப்போம்' என்னில், அதனைக் கடைப்பிடித்துப் பிறரிடத்துச் சென்றடையும் பயனையும் அவ ரிழத்தலால் 'நெஞ்சுநோ மென்று தலைதுமிப்பான் றண்ணளிபோன்ம், நெஞ்சா தெடுத்துரைக்கற் பாற்று' என்றார். 'கடவ' - பண்படியாகப் பிறந்த அஃறிணைப் பலவின்பாற் படர்க்கைக் குறிப்பு வினைமுற்றுப் பெயராதலால் 'செயக்கடவ' என்பது வியங்கோள் வினைமுற்றன்று; கடமை - பகுதி, ஈறு கெடுதலும்: வ் தோற்றமுஞ் சந்தி, அ - விகுதி. 'செய்தும்' - தன்மைப் பன்மை யெதிர்கால வினைமுற்று; செய்- பகுதி, தும் - விகுதி. செய்தல் கூடாமைமேல் நிற்றலால் 'மன்' ஒழியிசைப் பொருட்டு. 'நய' - வினைப்பகுதி வினையெச்சப் பொருளில் வந்தது.

---

எக. அல்லன செய்யினு மாகுலங் கூழாக்கொண்
டோல்காதார் வாய்விட் டுலம்புப—அல்லால்
பிறர்பிறர் செய்பபோற் செய்தக்க செய்தாங்
கழிமடம் பூண்டுநிற் பாரார்.

(ப-ரை) ஒல்காதார் - அடக்க மில்லாதார், அல்லன-(பிறர்க் குப் பயன்படுதல்) அல்லாதனவற்றை, செய்யின் உம் - செய்தா லும், (பயன்படுதலைச் செய்ததுபோல) ஆகுலம்-ஆரவாரத்தையே, கூழ் ஆ கொண்டு - பொருளாகக் கைக்கொண்டு, வாய்விட்டு - வாய் திறந்து, உலம்புப அல்லால் - (பலரறிய) இரைவார்களே யல்லாமல், பிறர் பிறர் - யாரோ வொருவர், செய்பபோல் - செய்தல்போல, செய்தக்க - (பிறருக்குப்) பயன்படுஞ் செயல்களை

செய்து - செய்து, ஆங்கு - (அது) போல, அறி மடம் - அறிந்தும் அறியாமையை, பூண்டு நிற்பார் - மேற்கொண்டிருப்பவர், ஆர் - யாவர்? (ஒருவரு மில்லை என்றபடி), எ-று.

(வி-ரை) அடக்க மில்லாதார் - மனம் வாக்குக் காயங்க ளடங்குத லில்லாதவர்; அவர்கள் செய்யுஞ் செயல்கள் பிறர்க்குப் பயன் படாதன ஆதலால் 'அல்லன செய்யினும்' எனவும், அவை பிறருக்குப் பயன்படுவனபோலக் கருதிப் பலரறிய ஆரவாரஞ் செய்தல் அவர்க ளியல்பு ஆதலால் 'ஆகுலங் கூறாக்கொண் டுலம்புப' எனவும், பிறருக்குப் பயன் படுவனவற்றைப் பிறரொருவர் செய்தது போலத் தாம் செய்துவைத்து, அதுபோல ஒன்றும் அறிந்தும் அறியார்போ லிருத்தல் அவ்வடக்க முடையோர்க்கன்றி யவர்களுக் கில்லாமையால் 'அல்லால் ஆர்' எனவுங் கூறினார். 'ஒல்காதார்' - எதிர்மறை வினைமுற்றுப்பெயர்; ஒல்கு - வினைப்பகுதி, உகரக் கேடு சந்தி, ஆ - எதிர்மறை விகுதி, அனைத்தும் ஓர் பகுதி; த - சாரியை, உகரக்கேடு சந்தி, ஆர் - விகுதி. 'உலம்புப' - பலர்பாற் படர்க்கை வினைமுற்று; உலம்பு - பகுதி, ப - விகுதி.

---

எஉ. பகையின்று பல்லார் பழியெடுத் தோதி
நகையொன்றே நன்பயனாக் கொள்வான்—பயமின்று
மெய்விதிர்ப்புக் காண்பான் கோடிறுடைத்துக் கோல்
கைவிதிர்த் தஞ்சப் படும். [வான்போல்

(ப-ரை) பகை இன்று - பகை யில்லாமல், பல்லார் - பலருடைய, பழி - பழிகளை, எடுத்து ஓதி - எடுத்துக் கூறி, நகை ஒன்று ஏ - (பிறர்) நகைத்த லொன்றையே, நன் பயன் ஆ - (தனக்கு) நல்ல பயனாக, கொள்வான் - கொள்ளுவோன், பயம் இன்று - தனக்குப் பயனில்லை (ஆயினும்), மெய் விதிர்ப்பு - பிறரது உடம்பி னடுக்கத்தை, காண்பான் - காணுதலை (தனக்குப் பயனாக), கொடிறு - (அவர்களது) கபோலத்தை, உடைத்து - தகர்த்து, கொல்வான்போல்-கொல்வானைப்போல, கை விதிர்த்து - கை நடுக்குற்று, அஞ்சப்படும் - (பிறரால்) அஞ்சப்படுவான், எ-று.

(வி-ரை) 'நன்பயனுகக் கொள்வாரை யஞ்சுதல் வேண்டும் எனப் பொருள் கூறுதலும் ஒன்று. 'கைவிதிர்த்தல்' ஆவது அச்சம் வந்தபொழுது தம்மை யறியாது வருங் கை நடுக்கம். பகையுள்ளபொழுது பிறர் பழி கூறில் அப் பழி செல்லாதாதலால் 'பகையின்று' எனவும், கொல்லுதல் ஒருநாளைத் துன்பம் இது பலநாளைத் துன்பம் ஆதலில் 'கைவிதிர்த்து' எனவுங் கூறினர்.

பிறர் நகைத்தலொன்றையே பயனுகக் கொண்டு தன்னுடு பழகினேர் பழியைக் கூறுவோரை யஞ்சி யொழியவேண்டும் என்பது கருத்து.

'இன்று' இரண்டனுள் முன்னது இன்றி என்னும் எதிர்மறைக் குறிப்பு வினையெச்சத் திரிபு; பின்னது எதிர்மறைக் குறிப்பு வினைமுற்று. 'ஆயின்', 'உம்' இரண்டும் இசையெச்சம். 'காண்பான்' - தொழிற்பெயர்; காண் - பகுதி, பான் - விகுதி. "வான்" "பாக்கு" இவ் விரண்டும் தொழிற்பெயர்ப் பொருளில் வரும். 'கைவிதிர்த்து' - விதிர்த்து என்னுஞ் சினை வினையெச்சம் 'அஞ்ச' என்னு முதல்வினையோடு முடிந்தது; [நன்னூல் - வி - உகா - சூத்திரம்]; விதிர் - பகுதி, த் - சந்தி, த் - இடைநிலை, உ - விகுதி.

---

எஅ. தெய்வ முளதென்பார் தீய செயப்புகின்
தெய்வமே கண்ணின்று நின்றுறுக்கும்—தெய்வம்
இலதென்பார்க் கில்லைத்தம் மின்புதல்வர்க் கன்றே
பலகாலுஞ் சோல்வார் பயன்.

(ப-ரை) தெய்வம் உளது என்பார் - தெய்வம் உண்டென்று சொல்லுவோர், தீய - தீய காரியங்களை, செய புகின் - செய்யத் தொடங்கில், தெய்வம் ஏ - அத் தெய்வமே, கண் இன்று - தாட்சிணிய மில்லாமல், நின்று - (அவர் முன்) நின்று, ஒறுக்கும் - தண்டிக்கும்; தெய்வம் இலது - தெய்வ மில்லை, என்பார் கு - என்று சொல்லுவோர்க்கு, இல்லை - (அத் தெய்வம் தண்டித்தல்) இல்லை; தம் - (தந்தைமார்) தம்முடைய, இன் புதல்வர் கு - இனிய புதல்

வர்களுக்கு, அன்று ஏ - அல்லவா, பல கால் உம் - (அப் புதல்வர் நன்னெறியினின்று) தவறுந்தோறும், பயன் - பயன் தருஞ் சொற்களை, சொல்வார் - சொல்லுவார், எ-று.

(வி-ரை) 'தெய்வம்' - ஆரியச் சிதைவு, தற்பவம்; அது பொருளால் உயர்திணையேனுஞ் சொல்லால் அஃறிணையாதலால் 'உளது', 'இலது', 'ஒறுக்கும்' என அஃறிணை முடிபு தந்து கூறினர். இடையில் நின்ற 'தெய்வம்' என்பதன் முதலில் அகரச் சுட்டுத் தொகுத்தல். 'ஒறுக்கும்': ஒறு - பகுதி, கு - சாரியை, க் - தோற்றமும்: உகரக்கேடும் சந்தி. 'பயன்' - சொல்மேல் நிற்றலில் தனியாகுபெயர். 'தம் மின்புதல்வர்க்குப் பலகாலும் பயன் சொல்வார்' என்பதில் தமக்கினிய ரல்லாத புதல்வர்க்குப் 'பலகாலும் பயன் சொல்லார்' என்று கொள்ளப்படுதல் உபலக்கணம்; இது நன்னூல் - பொ - எ - சூத்திரத்துள் அடங்கும். முன்னர்த் தொடங்கியதை முடித்தற்குக் கூறியதனுல் வேற்றுப் பொருள் வைப்பணி.

---

எச. தீயசெயற் செய்வா ராக்கம் பெருகினுந்
தீயன தீயனவே வேறல்ல—தீயன
நல்லன வாகாவாம் நாவின் புறநக்கிக்
கோல்லுங் கவயமா போல்.

(ப-ரை) இன்பு உற - பரிசவின்ப மிக, நா நக்கி - நாவினுல் நக்கி, கொல்லும் - (பின்பு) கொல்லும், கவயமா போல் - காட்டுப் பசுவைப்போல, தீய செயல் - கெட்ட செய்கைகளை, செய்வார் - செய்வார்க்கு, ஆக்கம் பெருகின் உம் - செல்வம் பெருகினும், தீயன - அத் தீச் செயல்களால் வருஞ் செல்வங்கள், தீயன ஏ - (முன்பு இன்பத்தைத் தரினும் பின்பு) தீமையைத் தருவனவே யன்றி, வேறு அல்ல - நன்மையைத் தருவன வல்ல; (ஏனெனில்) தீயன - கெட்ட பொருள்கள், நல்லன - நல்ல பொருள்கள், ஆகா ஆம் - (ஒரு போதும்) ஆகமாட்டாவாம், எ-று.

(வி-ரை) 'கவயம்'-காட்டுப் பசு; பரிசவின்ப மிகாவினுல் நக்கிப் பின்பு கொலைசெய்தல் காட்டுப் பசுவிற் கியற்கைத் தொழி லாதல்போலத் தீய செயலால் வரும் பொருள் தன்னைத் தேடி ஞேற்குத் தீராக் கெடுதி விளைத்தல் அப்பொருளுக் கியற்கைத் தொழில் என்பார் 'தீயனவே வேறல்ல' என்று கூறிய மமை யாது, 'தீயன நல்லன வாகாவாம்' என்றனர்.

தீத் தொழில்களால் வரும் பொருள்கள் கெடுதியை விளைக் கும் என்பது கருத்து.

'தீயன மூன்றனுள் நடு நின்றது குறிப்பு வினைமுற்று; மற்றை யிரண்டும் குறிப்பு வினைமுற்றுப் பெயர்கள். 'கவயமா' - பின் மொழியை விசேடித்து வந்த இருபெயரொட்டுப் பண்புத் தொகை.

---

எரு. நன்மக்கள் செந்நாத் தழும்பிருக்க நாள்வாயுஞ்
செந்நெறிச் செல்வாரிற் கீழல்லர்—முன்னைத்தம்
ஊழ்வலி யுன்னிப் பழிநாணி யுள்ளுடைவார்
தீய செயினுஞ் சில.

(ப-ரை) முன் ஐ - முற்பிறப்பிற் செய்த, தம் - தமது, ஊழ் வலி - தீயூழின் வன்மையை, உன்னி - நினைத்து, பழி நாணி - (வரும்) பழிக்கு நாணி, உள் உடைவார் - மனம் வருந்துவோர், சில தீய - சில தீய கருமங்களை, செயின் உம் - (ஒருகாலத்துச்) செய்தாலும் (அவர்), நன்மக்கள் - நல்லோரது, செம் நா-செவந்த நாவில், தழும்பு இருக்க - தழும்பேற, நாள்வாயும் - நாள்தோறும், செம் நெறி - நல்லொழுக்க வழியில், செல்வார் இன் - செல்லும் மேலோரினின்னும், கீழ் அல்லர் - கீழானவராகார், (மேலோரே என்றபடி), எ-று.

(வி-ரை) நல்லோ ரிடைவிடாது புகழ என்பார் 'நன்மக்கள் செந்நாத் தழும்பிருக்க' எனவும், தம்மை யறியாது தீயூழால் வரும் பழிக்கும் நாணி மனம் வருந்துவோர் ஒருபோதுந் தீய கருமஞ்

செய்யாரென்பார் எதிர்மறை யும்மை தந்து 'தீய செயினுஞ் சில' எனவும், அவ்வாறு செய்தல் வரினுந் தம்மாலன்று என்பார் 'ஊழ் வினை யுன்னி' எனவுங் கூறினார்.

மேலார் தீ யூழால் நல்லொழுக்கத்தினின்று தவறினும் அம் மேலோரே யாவர் என்பது கருத்து.

செம்மை இரண்டனுள் முன்னது நிறத்தின் மேலும் பின்னது நன்மைமேலும் நின்றன. 'வாய்' - "தோறும்" என்பது போலப் பன்மைப் பொருளில் வந்த இடைச்சொல். 'கீழ்' - பண்பாகுபெயர்.

---

எசு. பிறன்வரை நின்றாள் கடைத்தலைச் சேறல்
அறனன்றே யாயினு மாக—சிறுவரையும்
நன்னலத்த தாயினுங் கொள்க நலமன்றே
மெய்ந்நடுங்க வுண்ணடுங்கு நோய்.

(ப-ரை) பிறன் வரை நின்றாள் - பிறன் மனைவியினது, கடைத்தலை - தலைவாயிலினிடத்து, சேறல் - செல்லுதல், அறன் அன்று ஏ - தருமமே யல்ல; ஆயின் உம்-(தருமமெனக் கூறுவோருளர்) ஆனாலும், ஆக - செல்லக்கடவன்; சிறுவரை உம் - (தான் கருதிச்சென்ற செயல்) கணப்பொழுதேனும், நல் நலத்தது - (தனக்கு) நல்ல இன்பத்தைத் தருவது, ஆயின் - ஆனால், கொள்க - கொள்ளக்கடவன்; நலம் அன்று - (அச் செயலால் வருவது) இன்ப மல்ல; (வருவ தென்னவெனில்) மெய் நடுங்க - சரீரம் நடுங்க, உள் நடுங்கும் நோய் - மன நடுங்கும் நோயாம், எ-று.

(வி-ரை) 'பிறன் வரை நின்றாள்' - பிறனது ஆணைவழி நின்றாள். பரதாரத்தை விரும்பிச் செல்லுகை பாவம் என்பார் தேற்றேகாரந் தந்து 'கடைத்தலைச் சேறல் அறனன்றே' எனவும், சாருவாகன் முதலிய புறமதத்தார் சொல்லுவதை தக்கதெனக் கூறினும் அவர் கூறுவது இழிந்ததென்பார் இழிவு சிறப்பும்மை

தற்று 'ஆயினுமாக' எனவும், அச் செயலால் வருவது இன்பம் அன்று என்பார் 'சிறுவரையும் நன்னலத்ததாயிற் கொள்க' என வும், வருவன பழி பாவங்களும், அவள் கணவன் கைப்படின் உயி ரிழத்தலும் என்பார் 'நலமன்றே மெய்ந்நலிக்க வுண்ணமிக்கு நோய்' எனவுங் கூறினார்.

பாதாரத்தை விரும்பில் இன்ப மிழத்தலு மன்றி உயிரிழத்த லுங் கூடும் என்பது கருத்து.

தலைக்கடை 'கடைத்தலை' என நின்றது இலக்கணப்போலி.

---

எஎ. கருமஞ் சிதையாமே கல்வி கெடாமே
தருமமுந் தாழ்வு படாமே—பெரிதுந்தம்
இன்னலங் குன்றுமே யேரிளங் கோம்பன்னார்
நன்னலந் துத்த நலம்.

(ப-ரை) கருமம் - (தான் மேற்கொண்ட) கருமம், சிதை யாமே - கெடாமலும், கல்வி-(பயிலும்) கல்வி, கெடாமே-கெடாம லும், தருமம் உம் - (இல்வாழ்க்கைக் குரிய) அறச் செய்கையும், தாழ்வு படாமே-குறைவடையாமலும், பெரிது உம் - மிகவும், தம்- தமது, இன் நலம் - இனிய தாட்சிணியம், குன்றுமே - குறையாம லும், ஏர் - அழகிய, இளமை கொம்பு அன்னார் - இளமை தங்கிய பூங்கொம்பை யொத்த தமது மனைவியரது, நல் நலம் - இனிய இன்பத்தை, துத்தல் - அனுபவித்தல், நலம் - நன்மை யாம், எ-று.

(வி-ரை) 'கருமம்' ஆவது இல்வாழ்க்கையைத் தாங்க மேற் கொண்ட முயற்சி. 'கல்வி' ஆவது - முனிவர் மகிழ அவர்க ளரு ளிய நூலிற் பயிலுதல். 'தருமம்' ஆவது - பிரமசாரி முதலிய மூவரும் தத்தம் ஒழுக்கத்திற் குன்றாது நடக்கச் செய்தல், 'நலம்' ஆவது - விருந்தினர் சுற்றத்தார் முதலியோரிடத்துச் செய்யுந் தாட்சிணியம்.

மனைவியொடு கூடி நுகர்வோன் இல்வாழ்க்கைக்குரிய கரும முதலியவைகள் குறையாமல் இன்ப நுகரவேண்டும் என்பது கருத்து.

'நுத்தல்' - தொழிற்பெயர்; நு - பகுதி, த் - சந்தி, தல் - விகுதி.

---

எஅ. கொலையஞ்சார் பொய்ந்நாணார் மானமு மோம்பார்
களவொன்றோ வேனையவுஞ் செய்வார்—பழியோடு
பாவமிஃ தென்னார் பிறிதுமற் றென்செய்யார்
காமங் கதுவப் பட்டார்.

(ப-ரை) காமம் - காமத்தால், கதுவப்பட்டார் - பற்றப்பட்டவர்கள், கொலை அஞ்சார் - கொலைத்தொழில் செய்தற் கஞ்சார்; பொய் நாணார்-பொய் கூறுதற்கு நாணார்; மானம் உம் - பெருமையையும், ஓம்பார்-பாதுகாவார்; களவு ஒன்று ஓ-(பிறர்பொருளைக்) களவு செய்தலொன்றோ, ஏனையவும்-(அது) ஒழிந்த தீச் செயல்களையும், செய்வார் - செய்வார்கள்; இஃது - இக் காமம், பழி ஒடு பாவம் என்னார் - பழியொடு பாவமாமென்று கருதார்; பிறிது என் செய்யார் - வேறே யாதுதான் செய்யார்? (எல்லாத் தீத் தொழிலுஞ் செய்வார்), எ-று.

(வி-ரை) அளவுகடந்த காமமுடையோர் என்பார் காமத்தை வினைமுதலாக்கிக் 'காமங் கதுவப்பட்டார்' எனவும், பிறர் கூறுவனவும் அடங்குமென்பார் 'ஏனையவும்' என்றமையாது 'பிறிதென் செய்யார்' எனவுங் கூறினார்.

மிக்க காமமுடையோர் கொலை, களவு முதலிய தீத்தொழில்களைச் செய்வர் என்பது கருத்து.

'செய்வார்' - உடன்பாட்டு வினைமுற்று; செய்யார் - உடன்பாட்டில் வந்த எதிர்மறை வினைமுற்று.

---

முடையவனும், இசை வல்லான் - இசை நூலில் வல்லவனும், காந்தையர் - பெண்களுடைய, கண் கவர் - கண்களைக் கொள்ளை கொள்ளும், நோக்கத்தான் - பார்வை யுடையவனும், வாய்ந்த - பொருந்திய, நயன் உடை - இதமுடைய, இன் சொல்லான் - இனிய சொல்லை யுடையவனும், எனின் உம் - ஆயினும், மாதர் கு - கற்பில்லாத பெண்களுக்கு, அயலார்மேல் - (இவற்று ளொன்றேனு மில்லாத) பரபுருடர்மேல், மனம் ஆகும் - மனஞ் செல்லும், எ-று.

(வி-ரை) இதுமுதல் 'முறையும் குடிமையும்' என்ப தீறாகக் கற்பில்லாத மகளிர் தன்மை கூறுகின்றார். 'இசை' - தானியாகு பெயர். 'காந்தையர்', 'மாதர்' - ஒருமையிற் பன்மை வந்த வழு வமைதிகள்.

---

அஉ. கற்பின் மகளி னலம்விற் றுணவுகோளும்
பொற்றொடி நல்லார் நனிநல்லர்—மற்றுத்தம்
கேள்வற்கு மேதிலற்குந் தங்கட்குந் தங்கிளைஞர்
யாவர்க்குங் கேடுசூ ழார்.

(ப-ரை) நலம் விற்று - இன்பத்தைப் பிறருக்கு விற்று, உணவு கொளும் - உண்டு பிழைக்கும், பொன் தொடி - பொன்னு லாகிய வளையலை யணிந்த, நல்லார் - பரத்தையர், தம் கேள்வன் கு உம் - தமது நாயகனுக்கும், ஏதிலன் கு உம் - அந்நியனுக்கும், தங்கள் கு உம் - தங்களுக்கும், தம் கிளைஞர் யாவர் கு உம்-தமது சுற்றத்தா ரெல்லோருக்கும், கேடு சூழார்-கெடுதியைச் செய்யார்; (ஆதலால்) கற்பு இல் மகள் இன்-கற்பில்லாத பெண்ணைப் பார்க்கி லும், நனி நல்லர் - மிகவு நல்லர், எ-று.

(வி-ரை) கற்பில்லாத பெண் தன் கணவன் முதலியோர்க்குக் கெடுதியைத் தருதலால் 'நலம்விற் றுணவு கொளும் பொற்றொடி நல்லார் நனி நல்லர்' என்றார். 'தொடி' - தொழிலாகுபெயர்; தொடு - பகுதி, உகரக்கேடு சந்தி, இ - தொழிற்பெயர் விகுதி. இன்' உருபு உயர்வு குறித்தற்கண் வந்த எல்லைப்பொருட்டு.

அக. முறையுங் குடிமையும் பான்மையு நோக்கார்
நிறையு நெடுநாணும் பேணார்—பிறிதுமொரு
பெற்றிமை பேதைமைக் குண்டே பெரும்பாவம்
கற்பின் மகளிர் பிறப்பு.

(ப-ரை) முறை உம் - (நமக்கின்னு ரின்ன வுறவின ரென்னும்) முறைமையும், குடிமை உம் - தமது குடிப்பிறப்பின் றன்மையும் பிறரது குடிப்பிறப்பின் தன்மையும், பான்மை உம் - தமது தன்மையும் பிறரது தன்மையும், நோக்கார் - பாரார்; நிறை உம் - (தீய வொழுக்கிற் செல்லுந் தமது மனத்தினை) நிறுத்துதலையும், நெடு நாண் உம் - மிக்க நாணத்தையும், பேணார் - பாதுகாவார், பிறிது உம் - வேறெனும், ஒரு பெற்றிமை - ஒரு தன்மை, பேதைமை கு - அப் பேதைமைக் குணமுடையார்க்கு, உண்டு ஏ - உளதோ? (இல்லையென்றபடி; ஆதலால்) கற்பு இல் - கற்பில்லாத, மகளிர் பிறப்பு - பெண்கள் பிறப்பு, பெரும் பாவம் - பெரிய பாவமாம், எ-று.

(வி-ரை) பெண்களோடு கூடப் பிறந்து அவர்களோடு கூட வளர்தலால் 'நெடு நாண்' எனவும், தங்களுக்குரிய நல்லொழுக்கினைப் பற்றற விட்டு இழிகுண முடைமையால் அதனைப் 'பேதைமை' எனவும், இக் குணமுடையார் பிறப்புப் பாவ வடிவாதலால் 'கற்பின் மகளிர் பிறப்புப் பெரும் பாவம்' எனவுங் கூறினார். 'நிறை'-தொழிற்பெயர்; நிறு-பகுதி, உகரக்கேடு சந்தி, ஐ - விகுதி. 'பேதைமை' - பண்பாகுபெயர். அகரச்சுட்டுத் தொகுத்தல்.

---

அச. பெண்மை வியவார் பெயரு மெடுத்தோதார்
கண்ணோடு நெஞ்சுறைப்ப நோக்குறார்—பண்ணோடு
பாடல் செவிமடார் பண்பல்ல பாராட்டார்
வீடில் புலப்பகையி னார்.

(ப-ரை) வீடு இல் - ஒழிதலில்லாத, புலப் பகையினார் - இந்திரியங்கட்குப் பகைவராகிய துறந்தோர், பெண்மை - பெண்

தன்மையை, வியவார் - நன்கு மதியார்; பெயர் உம் - பெண் ணென்னும் பெயரும், எடுத்து ஓதார்-எடுத்துப் பேசார்; கண் ஒடு- கண்களோடு, நெஞ்சு உறைப்ப-மன மழுந்த, நோக்குறார்-பாரார்; பண் ஒடு - இசையோடு, பாடல் - பாடலை, செவி மடார்-கேளார்; பண்பு அல்ல-நன்மை யல்லாத செயல்களை, பாராட்டார் - கொண் டாடார், எ-று.

(வி-ரை) இதுமுதல் "ஐயந்திரிபின்று" என்பதிறுகத் துறந் தோர் தன்மை கூறுகின்றார்.

துறந்தோர் தாம் விட்ட பற்றுகளை மீட்டும் விரும்பார் என் பது கருத்து.

'நோக்குறார்', 'செவிமடார்', 'பாராட்டார்' இவை எதிர் மறை வினைமுற்றுகள்; இவற்றின் முதனிலைகள் 'நோக்குறு', 'செவிமடு', 'பாராட்டு' என்பனவாம்; 'நோக்குறு', 'செவிமடு' இவ் விரண்டும் நோக்கு, செவி என்னும் பெயர்ச்சொற்கள் 'உறு', 'மடு' என்னும் வினைப்பகுதியோடு கூடி ஒரு சொன்னீர்மைத் தாய் நின்றன.

---

௮௫. துயிற்சுவையுந் தூநல்லார் தோட்சுவையு மெல்லாம்
அயிற்சுவையி னாகுவவென் றெண்ணி—அயிற்சுவையும்
பித்துணாக் கொள்பபோற் கொள்ப பிறர்சிலர்போல்
மொத்துணா மொய்ம்பி னவர்.

(ப-ரை) பிறர் சிலர் போல் - தமக்கு அயலாராகிய சிலரைப் போல, மொத்துணா-ஐம்புல இன்பங்களால் அடி படாத, மொய்ம் பினவர் - தவ வலிமை யுடையோர், துயில் சுவை உம்-நித்திரையி னின்பமும், தூ-குற்ற மில்லாத, நல்லார்-அழகினையுடைய பெண்க ளது, தோள் சுவை உம் - தோளால் வரு மின்பமும், எல்லாம் - இவையெல்லாம், அயில் சுவை இன் - உண்ணு முணவின் இன்பத் தால், ஆகுவ என்று - ஆவன என்று, எண்ணி - நினைத்து, அயில் சுவை உம் - உண்ணு முணவின் சுவையையும், பித்து - பித்தன்,

உணு கொள்ப போல் - உணவு கொள்ளுதல் போல, கொள்ப - கொள்வார், எ-று.

(வி-ரை) பசி வருத்தும்போது பித்தன் உணவு சிறிது கொள்ளுதல்போல, இவர்கள் பசி நிமித்தம் உணவு சிறிது கொள் வார் என்பார் 'பித்துணுக் கொள்பபோற் கொள்ப' எனவும், பிறரை வஞ்சித்தற்குத் தவ வேடம் பூண்டோர் என்பார் அவரைப் 'பிறர் சிலர்போல்' எனவுங் கூறினர்.

உணவால் உலகவின்பங் கருதல் கூடுமெனப் பசி வந்த பொழுது சிறிது கொள்வார் என்பது கருத்து.

'அயில்' - முதனிலைத் தொழிலாகுபெயர். 'பித்து' - பண் பாகுபெயர். 'மொத்துணு' - ஈறு கெட்ட செயப்பாட்டு வினை எதிர்மறைப் பெயரெச்சம்; மொத்து - பகுதி, உண்-செயப்பாட்டு வினை விகுதி, உகரக்கேடு சந்தி, அனைத்தும் ஒரு பகுதி, ஆ-எதிர் மறை விகுதி, அனைத்தும் ஓர் பகுதி.

---

அசு. அன்போ டருளுடைய ரேனு முயிர்நிலைமற்
றென்பியக்கங் கண்டும் புறந்தரார்—புன்புலால்
பொய்க்குடி லோம்புவரோ போதத்தாற் றம்வேய்ந்த
புக்கில் குடிபுகுது வார்.

(ப-ரை) அன்பு அருள் உடையர் எனும் - (உயிர்கள்மேல்) அன்பும் அருளும் உடையராயினும், உயிர் நிலை - (தமது) தேகம், என்பு இயக்கம் - எலும்பு தோன்ற இளைத்தலை, கண்டும் - காணி னும், புறந்தரார்-(அதனைப்) பாதுகாவார்; (ஏனெனில்) போதத்து ஆல் - ஞானமென்னுங் கூரையால், தாம் வேய்ந்த - தம்மால் வேயப்பட்ட, புக்கில் - (மோட்சமாகிய) உரிய வீட்டில், குடி புகுதுவார் - குடிபுகு மெய்யறிவுடையோர், புன் புலால் - முடை நாற்றத்தையுடைய தசையால் வேய்ந்த, பொய் குடில் - பொய்யா கிய (தமது உடம்பென்னும்) குடிசையை, ஓம்புவர் ஓ - பாது காப்பாரோ, (பாதுகாவார் என்றபடி), எ-று.

(வி-ரை) 'புக்கில்' - உரியவீடு - உயிர்களிடத்து அன்பும் அருளு முடையோர் தமது தேகத்தினிடத் தன்பு முடையராக வேண்டும் என்பார் உடம்பு என்னாது 'உயிர்நிலை' எனவும், 'அதனை யவர் பாதுகாவாததற்குக் காரணம் தமக்கு உரிய வீடு அல்லாமையால் என்பார் 'பொய்க்குடி லோம்புவரோ' எனவுங் கூறினர்.

மெய்யறிவுடையோர் நிலையாத தமது உடம்பினைப் போற் றார் என்பது கருத்து.

'ஓடு' - இசை நிறைத்தற்கண் வந்த இடைச்சொல். 'வேய்ந்த' - இறந்தகாலப் பெயரெச்சம் ; வேய் - பகுதி, ந்-சந்தி, த் - இடைநிலை, அ - விகுதி.

---

அஎ. சிற்றின்பஞ் சின்னீர தாயினு மஃதுற்றார்
மற்றின்பம் யாவையுங் கைவிடுப—முற்றுந்தாம்
பேரின்ப மாக்கட லாடுவோர் வீழ்பவோ
பாரின்பப் பாழ்ங்கும் பியில்.

(ப-ரை) சிற்றின்பம் - சிற்றின்பமானது, சில் நீரது ஆயின் உம் - அற்பத்தன்மையை யுடையதானாலும், அஃது - அவ்வின் பத்தை, உற்றார் - விரும்பினோர், மற்று - (அது) ஒழிந்த இன்பம், யாவை உம் - எல்லா இன்பங்களையும், கைவிடுப - கைவிடுவோர் ; முற்று உம் - எப்போதும், பேரின்பம் - பேரின்பமாகிய, மா - பெரிய, கடல் ஆடுவோர் தாம் - கடலி லாடுவோர், பார் இன்பம் - அவ்வுலக வின்பமாகிய, பாழ் - கெடுதியை விளைக்கும், கும்பி இல் - நரகத்தில், வீழ்ப ஓ - வீழ்வாரோ (வீழார் என்றபடி), எ-று.

(வி-ரை) சிற்றின்பம் கணப்பொழுதிற் றோன்றி யழியுந் தன் மையதென்பார் 'சின்னீரது' எனவும், அதனை விரும்பினோர்க்கு நல்லொழுக்கங்களால் வரு மின்பங்களெல்லாங் கைக்கும் என்பார் 'மற்றின்பம் யாவையுங் கைவிடுப' எனவும், பேரின்பம் விரும்பி னோர்க்குக் கணப்போதாயினும் வீண்படா தென்பார் 'முற்றும் தாம், பேரின்ப மாக்கட லாடுவோர்' எனவும் கூறினர். 'பாழ்ங்

கும்பி '-பண்புத் தொகைநிலைத்தொடர்; பழமை என்னும் பண்புப் பகுதி ஈறு கெட்டு முதனீண்டு "இனையவும்" என்றதனால் ஈற் றகரம் கெட்டுப் பாழ் என நின்றது. வருமொழி வல்லெழுத்திற்கு இனவெழுத்து மிகுதல் நன்னூல்-மெ-உக-சூத்திரத்தில் "மேல்" என்ற மிகையால் அகரச்சுட்டுத் தொகுத்தல்.

---

அஅ. எவ்வினைய ரேனு மிணைவிழைச்சொன் றில்லெனிற்
றெவ்வுந் திசைநோக்கிக் கைதொழுஉம்—அவ்வினை
காத்த லிலரே லெனைத்துணைய ராயினுந்
தூர்த்தருந் தூர்ப்பா ரலர்.

(ப-ரை) எ வினையர் எனும் - (துறந்தோர்) எவ்வகைப்பட்ட தீத்தொழிலை யுடையராயினும், இணை விழைச்சு - புணர்ச்சியை விரும்பலாகிய, ஒன்று - ஒரு செய்கை, இல் எனில் - இலரானால், தெவ் உம் - பகைவரும், திசை நோக்கி - (அவர்களிருக்கும்) திசை யைப் பார்த்து, கை தொழும்-கை கூப்புவர்; அ வினை-அத் தீத் தொழிலை, காத்தல் இலர் எல் - காவாரானால், எனை துணையர் ஆயின் உம் - எவ்வளவு நல்லொழுக்கினை யுடையவரானாலும், தூர்த் தர் உம் - காமுகரும், அலர் தூர்ப்பார் - (அவர்) பழியை யெடுத் துக் கூறுவர், எ-று.

(வி-ரை) 'எவ்வினை' என்றது துறவறத்திற்கு விலக்கிய தீச்செயல்களை. பெண்களின்பம் விரும்பாத துறவிகள் யாதொரு தீத்தொழிலுஞ் செய்யார் என்பார் 'எவ்வினையரேனும்' எனவும், அவ் வின்பம் விரும்பினோர் நல்லொழுக்கஞ் சிறிது மிலர் என் பார் 'எனைத்துணைய ராயினும்' எனவுங் கூறினர்.

துறந்தோர்: பெண்க ளின்பம் விரும்பில் தமது நிலை கெடு தலுமன்றி யாவராலும் பழிக்கப்படுவர் என்பது கருத்து.

'விழைச்சு '-தொழிற்பெயர்; விழை - பகுதி, ச் - சந்தி, சு- விகுதி. 'தூர்ப்பார்'- பலர்பாற் படர்க்கை வினைமுற்று; தூர் - பகுதி, ப் - இடைநிலை, ஆர் - விகுதி.

---

7

அ௯. பரபரப்பி ஞோடே பலபல செய்தாங்
கிரவுபகல் பாழுக் கிறைப்ப—ஒருவாற்றல்
நல்லாற்றி னூக்கிற் பதறிக் குலைகுலைப
எவ்வாற்று னுய்வா ரிவர்.

(ப-ரை) *பரபரப்பு இன் ஓடு - விரைவோடு, பலபல செய்து-(உலகினர்) பல காரியங்களைச் செய்து, இரவு பகல் - இரவையும் பகலையும், பாழ் உ கு இறைப்ப - வீணிற் செலுத்துவர்; ஒரு ஆறு ஆல் - ஒரு வகையால், நல் ஆறு இல் - நல்லொழுக்க வழியில், நூக்கில் - (பெரியோர்) செலுத்தினுல், பதறி - விரைந்து, குலை குலைப - நடுநடுங்குவார்கள்; (ஆதலால்) எ ஆறு ஆன் - எவ்வகையால், இவர் - இவர்கள், உய்வார் - (பிறவித் துன்பத்தினின்றும்) தப்புவார்?, எ-று.*

(வி-ரை) *ஒரு கணமேனும் தமது மனவாக்குகளை நல்லொழுக்கத்திற் சிறிதுஞ் செலுத்தார் என்பார் 'இரவுபகல் பாழுக் கிறைப்ப' எனவும், பெரியோர் அந் நெறியிற் சிறிது செலுத்தில் அவர்க்கு நெருப்பிற் றள்ளுதலோ டொக்கு மென்பார் 'நூக்கிற் பதறிக் குலைகுலைப' எனவும், துறந்தோர் செயலைக் கூறுவோர் இவர் செயலுக் கிரங்கினர் ஆதலால் 'எவ்வாற்று னுய்வா ரிவர்' எனவுங் கூறினர்.*

*உலகினர் தமது வாணுளை வீணுள்படச் செய்வர் என்பது கருத்து.*

*'நூக்கில்'- எதிர்கால வினையெச்சம்; நூக்கு - பகுதி, உகரக் கேடு சந்தி, இல்-விகுதி, கு - உருபு மயக்கம். 'பரபரப்பு', 'குலை குலைப - இவற்றுள் பின்னைய பிரிந்திசைப்பினும் முன்னைய பிரிந்திசையாமையால் இரட்டைச் சொற்கள்.*

---

௯௦. இளைய முதுதவ மாற்றுது நோற்றேன்
றுளைவின்று கண்பாடு மூழே—விளிவின்று
வாழ்நாள் வரம்புடைமை காண்பரேற் காண்பாரும்
தாழாமே நோற்பார் தவம்.

(ப-ரை) விளிவு - இறத்தல், இன்று - இப்பொழுதென, வாழ்நாள் - ஆயுள்நாளின், வரம்பு உடைமை - முடிவை, காண்பர் ஏல் - அறிவாரானால், இளையம் - (யாம் இப்போது) இளையோம்; முதுது - முதுமையில், நோற்று - (பசி குளிர் முதலியவற்றைப்) பொறுத்து, தவம் ஆற்றுதும் என்று - தவம் செய்வோமென்று, உளைவு இன்று - வருத்த மில்லாமல், கண்பாடு உம் - உறங்குதலும், ஊழ் ஏ - முறையேயாம்; காண்பார் உம்-(ஆயுள் நாள் முடிவைக்) காணுந் துறவினரும், தாழாமே - (கணப்பொழுதேனும்) நீட்டியா மல், தவம் நோற்பார் - தவஞ் செய்வார், எ-று.

(வி-ரை) 'வரம்பு உடைமை' - அளவுறுத்தல்; அது முடி வாதலின் முடிவு என்றனம். உடம்பு கணப்பொழுதேனு நிற்றலை யறித லரிது என்பார் 'வாழ்நாள் வரம்புடைமை காண்பரேல்' எனவும், அவ் வுடம்பாலாய பயனை யது உள்ளபொழுதே பெரு தொழிதல் அறியாமை யென்பார் 'உளைவின்று கண்பாடு மூழே' எனவுங் கூறினர்.

அழியு முடம்பினால் அழியாத மறுமைப்பயனை யடைய வேண் டும் என்பது கருத்து.

'உளைவு', 'விளிவு' இரண்டுந் தொழிற்பெயர்கள்; உளை, விளி - பகுதி, வு - விகுதி.

---

கூக. நல்லவை செய்யத் தொடங்கினு நோனுமே
அல்லன வல்லவற்றிற் கொண்டேய்க்கும்—எல்லி
வியனெறிச் செல்வாரை யாறலைத் துண்பார்
செலவுபிழைத் துய்ப்ப போல்.

(ப-ரை) எல்லி - இரவில், வியன் நெறி - பெரு வழியில், செல்வார் ஐ - செல்லும் வழிப்போக்கரை, ஆறு அலைத்து - வழி யிற் பறித்து, உண்பார் - உண்ணும் வேடர்கள், செலவு - (அந் நெறியில்) செல்லுகையை, பிழைத்து - தப்புவித்து, உய்ப்ப போல் - (கொடு வழியில்) செலுத்துதல் போல; நல்லவை - நல்ல கருமங்களை, செய்யத் தொடங்கின் உம் - செய்யத் தொடங்கினு

னும், நோனுமே - (அது) பொறாமல், அல்லன-தீயூழ்கள், அல்லவற்று இல் - தீய சருமங்களில், கொண்டு உய்க்கும் - கொண்டு செலுத்தும், எ-று.

(வி-ரை) துறந்தோர்க்கும் ஊழ் உண்மையால் அவர்கள் சில தீய கருமங்களைச் செய்யினும் ஊழென்று கருதி யுலகின ரொழுக வேண்டும் என்பார் 'நல்லன செய்யத் தொடங்கினும் அல்லன வல்லவற்றிற் கொண்டுய்க்கும்' என்றார்.

யாவர்க்கும் ஊழ் வலிது என்பது கருத்து.

[திருக்குறள்-அறத்துப்பால்-துறவறவியல்-௩அ-அதி.-ஊழ்-௯௦]

" ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்."

என்றார் பிறரும். 'நோனுமே' - எதிர்மறை வினையெச்சம்; நோன் - பகுதி, ஆ - எதிர்மறை விகுதி, அனைத்தும் ஓர் பகுதி, மே - விகுதி.

---

௯௨. நெஞ்சு புறம்பாத் துறந்தார் தவப்போர்வை
கஞ்சுக மன்று பிறிதொன்றே—கஞ்சுகம்
எப்புலமுங் காவாமே மெய்ப்புலங் காக்குமற்
றிப்புலமுங் காவா திது.

(ப-ரை) நெஞ்சு - (தமது) மனம், புறம்பு ஆ - புறத்திற் செல்ல, துறந்தார் தவப்போர்வை - துறந்தவர்களுடைய தவப் போர்வையானது, கஞ்சுகம் அன்று - சட்டையல்ல; (ஏனெனில்) கஞ்சுகம் - சட்டையானது, எ புலம் உம் - எல்லாப் புலன்களையும், காவாமே - காக்காது விடினும், மெய் புலம் - உடம்பாகிய புலனொன்றையும், காக்கும் - பாதுகாக்கும்; இது - இத் தவப் போர்வை, இ புலம் உம்-இவ் வுடம்பாகிய புலத்தையும், காவாது - பாதுகாக்காது; (அதனால்) பிறிது ஒன்று - மற்றொரு செயலாம், எ-று.

(வி-ரை) 'தவப்போர்வை'-தவத்திற்குரிய வேடம்; மனத்தை நிறுத்தாது விடயத்திற் செல்ல விடுவோர் என்பார் 'நெஞ்சு புறம் பாத் துறந்தோர்' எனவும், மெய்-வாய்-கண்-மூக்கு-செவி என்பார் முற்றும்மை தந்து 'எப்புலமும்' எனவும், சட்டைபோலப் புறத் துறவினர் வேடம் பயன்படுதல் இல்லை என்பார் 'இது இப்புலமுங் காவாது' எனவும், இவ் வேடம் பிறரை வஞ்சித் துய்தற்பொருட்டு என்பார் 'பிறிதொன்று எனவுங் கூறினர்.

புறத் துறவினர் தவவேடம் இருமைப் பயனையும் இழப்பிக் கும் என்பது கருத்து.

'போர்வை' - போர்க்கப்படுவ தென்னுஞ் செயப்படுபொரு ளில் வந்த தொழிற்பெயர்; போர் - பகுதி, வ் - சந்தி, ஐ-விகுதி; இதனைத் தொழிலாகுபெயர் எனக் கொள்வாரு முளர்.

---

௬௩. வஞ்சித் தொழுகு மதியிலிகாள் ! யாவரையும்
வஞ்சித்தோ மென்று மகிழன்மின்—வஞ்சித்த
எங்கு முளனொருவன் காணுங்கொ லென்றஞ்சி
யங்கங் குலைவ தறிவு.

(ப-ரை) வஞ்சித்து - (தவ வேடத்தாற் பிறரை) வஞ்சித்து, ஒழுகும் - (அவ் வேடத்தில் தமது தீயொழுக்கத்தை மறைத்து) நடக்கும், மதியிலிகாள் - அறிவில்லாதவர்களே !, யாவர் ஐ உம் - எல்லோரையும், வஞ்சித்தோம் என்று - வஞ்சித்து நடக்கின்றோ மென்று, மகிழன்மின்-மகிழ்ச்சியடைத லொழியுங்கள் !, வஞ்சித்த- (நீங்கள்) வஞ்சித்த செயல்களை, எங்கு உம் உளன் ஒருவன் - எவ் விடத்து நிறைந்துள்ள கடவுளொருவன், காணும் என்று-காண்பா னென்று, அஞ்சி - பயந்து, அங்கம் குலைவது - உடம்பு பதறுவது, அறிவு - அறிவாம், எ-று.

(வி-ரை) அணுவுக் கணுவாய் மகத்துக்கு மகத்தாய் ஒருவ னுள்ளான் என்பார் 'எங்கு முளனொருவன்' எனவும், அவன், மறைந்தொழுகும் தீயொழுக்கங்க ளெல்லா மறியவல்லான் என்

பார் 'யாவரையும் வஞ்சித்தோ மென்று மகிழன்மின்' எனவும், உலகின ரறிந்து தண்டித்தலினும் அவன் தண்டித்தல் பெரிதென் பார் 'அஞ்சி, யங்கங் குலைவ தறிவு' எனவுங் கூறினர்.

'மகிழன்மின்' - எதிர்மறை ஏவற்பன்மை வினைமுற்று; மகிழ் - பகுதி, அல் - எதிர்மறை விகுதி, அனைத்தும் ஓர் பகுதி, ல் ன் ஆகத் திரிதல் சந்தி, மின்-விகுதி. 'அஞ்சி' என்னும் முதல் வினையெச்சம் 'அங்கங் குலைவது' என்னுஞ் சினைவினைத் தொழிற்பெயரோடு முடிந்தது. 'மதியிலிகாள்' - விளியுருபு.

---

௯௪. மறைவழிப் பட்ட பழிமொழி தெய்வம்
பறையறைந்தாங் கோடிப் பரக்கும்—கழிமுடைப்
புன்புலா ஞற்றம் புறம்போதிந்து மூடினும்
சென்றுதைக்குஞ் சேயார் முகத்து.

(ப-ரை) புறம் பொதிந்து - புறத்தில் மறைத்து, மூடின் உம்- மூடினாலும், கழி முடை - மிகுந்த தீ நாற்றத்தையுடைய, புன் புலால் நாற்றம் - இழிவாகிய புலால் நாற்றமானது, சேயார் முகத்து - தூரத்திலுள்ளவர் முகத்தில், சென்று - போய், தைக் கும் - பாயும்; (அதுபோல) மறை வழி - இரகசியத்தில் (செய்த), பட்ட - (இழிதொழிலால்) வந்த, பழி மொழி - பழிச்சொற்கள், தெய்வம் பறை அறைந்தால் - தெய்வம் பறைசாற்றித் தெரிவித் தால், ஆங்கு - போல, ஓடி - (எங்கும்) சென்று, பரக்கும்-பரவும், எ-று.

(வி-ரை) 'சென்று தைக்கும்' 'சென்று உதைக்கும்' எனப் பிரித்துச் 'சென்று தாக்கும்' எனப் பொருள் கொள்ளினு மமை யும். உபவாசி யென்பான் தேகபீனத்தால் ஒளித்துண்ட லறிதல் போலத், தவ வேடத்தால் மறைந்து தீமை செய்வோன் முகமுத லிய குறிகளால் அவன் தீமை வெளிப்படு மென்பார் 'தெய்வம் பறையறைந்தாங் கோடிப் பரக்கும்' என்றார். 'மறை' - முத னிலைத் தொழிற்பெயர். பறை அடித்தல் - அது வாச்சியத்தின் மேல் நிற்றலால் முதனிலைத் தொழிலாகுபெயர்.

௯௫. மெலியார் விழினு மொருவாற்று னுய்ப
வலியார்மற் றொன்றனு முய்யார்—நிலைதப
நொய்ய சழக்கென வீழாவாம் வீழினும்
உய்யுமா லுய்யா பிற.

(ப-ரை) நொய்ய - (உருவில்) சிறிய பிராணிகள், நிலை - (நிற்கும்) நிலையினின்று, தப - தவறினால், சழக்கு என - விரைவாக, வீழா ஆம் - வீழமாட்டாவாம்; வீழின் உம் - வீழ்ந்தாலும், உய்யும் - பிழைக்கும்; பிற - பெரிய பிராணிகள், உய்யா - (நிலையில் நின்று தவறினால் ஒருவகையாலும்) பிழையா; (அதுபோல), மெலியார் - அறிவில் சிறியார், வீழின் உம் - தன் நிலையினின்று தவறினும், ஒரு ஆறு ஆன் - ஒருவகையால், உய்ப - பிழைப்பார்; வலியார் - பெரியோர், மற்று ஒன்று ஆன் உம் - வேறொரு வகையாலும், உய்யார் - பிழையார்; எ - று.

(வி-ரை) சிறியோர் செய்தற் கெளிய செயலி னிற்றலால் அதனினின்று தவறார் எனவும், தவறிற் பிழைப்பார் எனவும், பெரியோர் செய்தற்கரிய செயலி னிற்றலால் தவறுதல் கூடும் எனவும், தவறிற் பிழையார் எனவும் உவமைக்கேற்ப வுவமேயத்திற்கும் பொருள் விரிக்க. 'தப'- "செய" என்னும் வாய்பாட் டெச்சம்; இது எதிர்காலத்தின்மேல் நின்றது; தப - பகுதி, உகரக்கேடு ந்தி, அ - விகுதி. 'சழக்கென' - விரைவுக் குறிப்புப் பொருளில் வந்த உரிச்சொல்லடியாகப் பிறந்த வினையெச்சம்; சழக்கென் - பகுதி.

---

௯௬. இசையாத போலினு மேலையோர் செய்கை
வசையாகா மற்றையோர்க் கல்லால்—பசுவேட்டுத்
தீயோம்பி வான்வழக்கங் காண்பாரை யொப்பவே
யூனோம்பி யூன்றின் பவர்.

(ப-ரை) மேலையோர் செய்கை - பெரியோரது செய்கை, இசையாதபோலின் உம் - பிறருக்கு இசையாதிருப்பினும், மற்றை

யோர் கு அல்லால் - சிறியோர்க்கன்றி, வசை ஆகா - பழியாகா வாம்; வேட்டு - (உலகுய்ய) விரும்பி, பசு - ஓருயிரின் (மேதை யால்), தீ ஓம்பி - முத்தீத்தொழிலை நடத்தி, வான் வழக்கம் - மழை பெய்தலை, காண்பார் ஐ-செய்யும் அந்தணரை, ஊன் ஓம்பி- (தமது) உடம்பைப் பாதுகாக்க, ஊன் தின்பவர் - (மற்றோருயி ரின்) தசையைத் தின்பவர், ஒப்ப எ - ஒப்பாவாரோ?, (ஆகார் என்றபடி), எ-று.

(வி-ரை) முத்தீ - ஆகவனீயம், தட்சணாக்கினியம், காருக பத்தியம். பெரியோர் வரம்பு கடந்து நடக்கினும் பழியன்று என் பார் 'இசையாத போலினும் வசையாகா' எனவும், அவ்வாறு சிறி யோர் நடக்கிற் பழியாம் என்பார் 'அல்லால்' எனவும் கூறினர்.

"யானை மதப்பட்டா லலங்கார மாஞ்சிறுநாய்
தானு மதப்பட்டாற் சரியாமோ—ஞானி
தடைமீறி னாலுஞ் சரியாகுங் கன்மி
கடைமீற லாகாது காண்."

என ஒழிவிலொடுக்கத்துட் காண்க. 'வேட்டு' - இறந்தகால வினையெச்சம்; வேள் - பகுதி, த் - இடைநிலை, ள் த் இரண்டும் டகரமாகத் திரிதல் சந்தி, உ - விகுதி. 'வான்' - மேகம்; மழை மேல் நிற்றலின் இடவாகுபெயர். 'ஓம்பி' - செய்வெனெச்சத் திரிபு.

---

௬௭. எவரேவ ரேத்திறத்த ரத்திறத்த ராய்நின்
றவரவர்க் காவன கூறி—எவரேவர்க்கும்
உப்பாலாய் நிற்பமற் றெம்முடையார் தம்முடையான்
எப்பாலு நிற்ப தென.

(ப-ரை) தம் உடையான் - தம்மை யாளாகவுடைய கட வுள், எ பால் உம் - (உள்ளும் புறம்புமாகிய) எவ்விடத்தும், நிற் பது என - நிற்றல்போல; எம் உடையார் - எம்மை யாளாக வுடைய பெரியோர், எவர் எவர் - யார் யார், எ திறத்தர் - எவ்

வெப்பக்குவத்தினரோ, அ திறத்தர் ஆய்-(தாமும்) அவ்வர் நிலைய ராய், நின்று - நின்று, அவர் அவர் கு - அவரவர்களுக்கு, ஆவண - ஆகும் உண்மை நெறிகளை, கூறி - உபதேசித்து, எவர் எவர் கு உம் - யார்யாரிடத்தும், உ பால் ஆய் - (கலந்தும் கலவாதும்) அப் புறமாய், நிற்ப - நிற்பார்கள், எ-று.

(வி-ரை) மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என்னும் பக்குவர்கட்கு உண்மைநெறி யுபதேசிக்குமிடத்துத் தாமு மந்நிலைய ராய் நின்றாலன்றிப் பயன்படா ஆதலால் 'எவரெவர் எத்திறத்த ரத்திறத்தராய் நின்று' எனவும், தாம் நின்ற நிலை யவர்பொருட் டாதலின் 'எவரெவர்க்கும் உப்பாலாய் நிற்ப' எனவுங் கூறினார்.

துறந்தோர் அவரவர் தகுதிக்கேற்ப நின்று உண்மைநெறி கூறுவர் என்பது கருத்து.

கு - உருபு மயக்கம்.

---

கூஅ. மெய்புணர்ந்தார் பொய்ம்மேற் புலம்போக்கார்
[மெய்யுணர்ச்சி
கைவருதல் கண்ணுப் புலங்காப்பார்—மெய்யுணர்ந்தார்
காப்பே நிலையாப் பழிநாண நீள்கதவாச்
சேர்ப்பார் நிறைத்தாழ் செறித்து.

(ப-ரை) மெய் உணர்ந்தார் - அறிவுநூல் உணர்ந்தோர், (தமது மன மடங்க) காப்பு ஏ - (புலன்களைக்) காத்தலே, நிலை ஆ - நிலையாகவும், பழி - இழிதொழிலுக்கு, நாணம் - நாணுதலே, நீள் கதவு ஆ - நீண்ட கதவம் ஆகவும் (கொண்டு), நிறை - நிறையாகிய, தாழ் - தாழினை, செறித்து சேர்ப்பார் - கொளுவிச் சேர்ப்பார்; (ஆதலால்) மெய் உணர்ந்தார் - அவ்வறிவுநூ லுணர்ந்தோர், பொய் மேல் - விடயங்களில், புலம் போக்கார் - தமது புலன்களைச் செலுத் தாது, மெய் உணர்ச்சி - மெய்யறிவு கை வருதல் - தமக்குக் கை கூடுதலே, கண் ஆ - குறியாக, புலம் - அப் புலன்களை, காப்பார் - காப்பார்கள், எ-று.

(வி-ரை) நிறை மனத்தைத் தீ நெறியிற் செலுத்தாது நன்னெறியி னிறுத்தல்-மெய்யுணர்ச்சி பிறப்பு வீடுகளையும், அவற்றின் காரணங்களையும் ஐயம் விபரீத மின்றி யறிதல்.

அறிவுநா லுணர்ந்த பெரியோர் மெய்யறிவு தமக்குச் சித்திக்கும் நெறியில் நிற்பர் என்பது கருத்து.

'மெய்' - தானியாகுபெயர். அகரச்சுட்டுத் தொகுத்தல்.

௯௯. கற்றுத் துறைபோய காதலற்குக் கற்பினாள்
பெற்றுக் கொடுத்த தலைமகன்போல்—முற்றத்
துறந்தார்க்கு மெய்யுணர்விற் றோன்றுவதே யின்பம்
இறந்தவெலாந் துன்பமலா தில்.

(ப-ரை) கற்று - நூல்களைக் கற்று, துறை போய - அந்நெறியிற் சென்ற, காதலன் கு-கணவனுக்கு, கற்பினாள் - (அவன் இல்வாழ்க்கைக்குரிய) மனைவியானவள், பெற்று கொடுத்த - பெற்றுத் தந்த, தலைமகன் போல் - சேஷ்டபுத்திரன் போல், முற்றத் துறந்தார் கு - (இருவகைப் பற்றையும்) பற்றற விட்டார்க்கு, மெய் உணர்வு இல் - மெய்யறிவில், தோன்றுவது ஏ - தோன்றும் இன்பமே, இன்பம் - இன்பமாம்; இறந்த எலாம் - அது ஒழிந்த யாவும், துன்பம் அல்லாது - (அவர்கட்குத்) துன்பமன்றி, இல் - வேறில்லை, எ-று.

(வி-ரை) 'இறந்தவெலாந் துன்பமேயாம்' எனவும் பாடமுண்டு. கற்றறிவுடையோர் தென்புலத்தார் கடன்செய்து முடித்தற் பொருட்டே யில்வாழ்க்கையைக் கைக்கொள்ளுதலாலும், அவ்வில்வாழ்க்கைப் பயன் தலைமகனாதலாலும், 'கற்பினாள் பெற்றுக் கொடுத்த தலைமகன்போல்' என்றார். இவ் வுவமைக்கேற்ப எடுத்த வுடம்பாலாகிய கடன்களை முடித்தற்பொருட்டே துறவறங் கைக்கொள்ளுதலும், மெய்யறிவிற் றோன்று மின்பமே அத் துறவறத்தின் பயன் எனவும் உவமேயத்துக்குங் கொள்க.

கOO. கற்றுங் கறிந்தடங்கித் தீதோரீஇ நன்றாற்றிப்
பெற்றது கொண்டு மனந்திருத்திப்—பற்றுவதே
பற்றுவதே பற்றிப் பணியறநின் றொன்றுணர்ந்து
நிற்பாரே நீணெறிச் சென்றார்.

(ப-ரை) கற்று - (அறிவுநூல்களைக்) கற்று, அறிந்து-(அவற்றின் பொருளை ஐயந்திரிபற) உணர்ந்து, அடங்கி-(அதற்குத் தக) அடங்கி, தீது - (அந்நூல் விலக்கிய) குற்றத்தை, ஒருவி - நீக்கி, நன்று ஆற்றி - (விதித்த) நன்மையைச் செய்து, பெற்றது கொண்டு - இடைத்தது கொண்டு, மனம் திருத்தி - மனமாறுபடலறச் செய்து, பற்றுவது - (தாமடையும்) வீட்டு நெறியையும், பற்றுவது - (அது அடைதற் கமைந்த) படித்தரத்தையும், பற்றி - கைக்கொண்டு, பணி அற - (சரியைமுதலிய) தொழில்கள் (சோர்ந்து) நீங்க, நின்று - (சமாதிநிலையில்) நின்று, ஒன்று-சிவத்தினை, உணர்ந்து - (பேதமற) அறிந்து, நிற்பார் ஏ - (அந்நிலையிற் பெயராது) நிற்பவரே, நீள் - அழிவில்லாத, நெறி சென்றார் - துறவறநெறியிற் சென்றவ ராவர், எ-று.

(வி-ரை) ஞானிகட்கும் பிராரத்துவம் உளதாதலிற் 'பெற்றது கொண்டு' எனவும், ஆகாமியம் வாராமற் பாதுகாக்க வேண்டுதலின் 'மனந் திருத்தி' எனவும், தூங்குவோன் கையிலுள்ள பொருள் நழுவுதல்போலச் சமாதிநிலையில் தொழில்கள் நழுவ வேண்டுதலின் 'பணியற நின்று' எனவும், சிவத்தை யுணர்ந்தோர் மீட்டும் உணர்த லில்லாமையால் தேற்றேகாரந் தந்து 'நிற்பாரே' எனவுங் கூறினர்.

---

கOக. ஐயந் திரிபின் றளந்துத் தியிற்றெளிந்து
மெய்யுணர்ச்சிக் கண்விழிப்பத் தூங்குவோர்—தம்முளே
காண்பதே காட்சி கனவு நனவாகப்
பூண்பதே தீர்ந்த பொருள்.

(ப-ரை) அளந்து - (பதி பசு பாச இலக்கணங்களை வேதாகம அளவைகளால்) அளவு செய்து, ஐயம் - (அவற்றில்) சந்தேகமும்,

திரிபு - விபரீதமும், இன்று - இல்லாமல், உத்தி இல் - கருத லளவையால், தெளிந்து - நிச்சயித்து, மெய் உணர்ச்சி கண்-மெய் யறிவாகிய கண், விழிப்ப - விழியாநிற்ப, தூங்குவோர் - ஞான நித்திரை செய்யுஞ் சிவயோகிகள், தம் உள் ஏ - தமது அம் மெய் யறிவாகிய கண்ணாலே, காண்பது ஏ - காணுங் காட்சியே, காட்சி-காட்சியாம்; கனவு - (அந்த ஞானநித்திரையில் காணும்) கனவே, நனவு ஆக - சாக்கிரமாக, பூண்பது ஏ - அடைவதே, தீர்ந்த பொருள் - முடிந்த பொருளாம், எ-று.

(வி-ரை) உள் - ஞானக்கண்; அக்கண் என்பார் 'மெய் யுணர்ச்சிக்கண்' எனவும், அகக்கண் விழிப்புடையோர் புறக்கட் காட்சியால் வரும் பலவகைப் பற்று மிழத்தலால் 'தூங்குவோர்' எனவுங் கூறினர்.

நீதிநெறி விளக்கம் மூலமும், விருத்தியுரையும்
முற்றுப்பெற்றன.